# முகவுரை



தமிழ் மக்கள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் நாகரிகப்பான்மையுடன் பெருமைவாய்ந்து விளங்கினர். அவர் அந்நாளில் அடைந்திருந்த அறிவு முதிர்ச்சியால், பல நூல்களையும் கலைஞானங்களையும் பெருக்கி இக்காலத்தவர்களுக்குப் பெரிய பொக்கிஷங்களாக வைத்துவிட்டுப்போயினர். தமிழுலகத்தில் மிக்க பெருமைவாய்ந்த சோழர்களின் சரித்திரத்தைச் சில சரித்திரக்காரர்கள் கடந்த ஐம்பது வருடங்களாகத் தமது ஆராய்ச்சியின் பயனை வெளியிட்டு வருகின்றனர். சோழமன்னர்களின் சரித்திரம் சிலாசாஸன ஆராய்ச்சியாலும் மற்ற கைங்கரியங்களின் முறையாலும் வெளிவந்தன. சோழமன்னர்களில் மிக்க சிறப்பும் மேன்மையுங்கொண்டு அரசியல் நடாத்தினவர் இராஜ இராஜ சோழனே யாவர். பண்டைத் தமிழரசர்களின் பெருமையைத் தற்காலத்தவர் நன்குணர்தல்வேண்டும். தமிழரசர்களின் வீரம, தர்மம, கொடை, சீலம முதலியவைகளும இந்நூலிற் காணப்படும. இச் சிறுநூலுக்கு ஆதாரமாயிருந்த நூல்கள் பலவாம். எஸ். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார அவர்கள் எழுதிய 'பழைய இந்தியா' கனகசபை பிள்ளை, தாமோதரம பிள்ளை முதலியவர்கள் எழுதிய நூலகள், வெங்கய்யா அவர்கள் பதிப்பித்த தென் இந்திய சிலா சாஸனங்கள் முதலிய பல நூல்கள் முக்கியமானவை. இச் சிறுநூல் தமிழுலகுக்குப் பயன்படற் பொருட்டு யாம அறிந்தவரை எழுதி அச்சிட்டனம். பண்டைத் தமிழரசரைபபற்றிய பல சிறு நூல்கள் காலக்கிரமத்தில், வெளிவரும். இந்நூல்களைத தமிழ்நாட்டார் அங்கீகரிப்பார்களாக!

சென்னை. }
28-8-23. }

கிருஷ்ணஸ்வாமி சர்மா.

அவையடக்கம்.

---

பக்கம்.


KADAGAM
கடாகம்
KALINGAM
கலிங்கம்
VENGAINADU
வெங்கைநாடு
CHALUKYAS
W CHALUKYAS OR
IRATTAPADI
இரட்டபாடி
NULAMBAPADI
நுளம்பபடி
TIRUVALLAM
TIRUKKOVILUR
KANCHI
கங்கபாடி
GANGAPADI
PALAR
UTTARANALLUR
BURMA
காழகம்
COORG
குடகு
TALAIKADU
தலைக்காடு
JAYANGONDA CHOLAPURAM
KONGU
TRICHI
CHOLAS
TANJ
PANDYAS
பாண்டிநாடு
CHERAS
சேரநாடு
QUILON
கொல்லம்
CEYLON
ஈழமண்டலம்
ANURADAPURI
தமிழகம்



## தமிழரும் தமிழ் நாடும்

நந்தேயத்துப் பண்டைச் சரித்திரம் அரையுங் குறையுமாக விருப்பதென்பது பலர் கொண்ட அபிப்பிராயமாகும். பழைய சரித்திரங்களை ஆராய்ச்சி செய்வதற்குச் சிலாசாஸனம், கட்டிட நிர்மாணங்கள், பாஷையின் நடை, நாகரீகம், மன்னர்களின் வீரச் செயல்கள், இலக்கியம், புலவர் பாடல்கள், ஆகிய இவைகள் பேருதவியாக நிற்கும். புராணங்களைக் கொண்டும், கதைகளைக்கொண்டும், சரித்திரங்கள் உண்மையாக உள்ளபடி அறியப்படமாட்டா. நமது நாட்டுச் சரித்திரம, சங்கிலிக்கோர்வைபோ லில்லாமல் சிலகாலத்தே அதிகமாகவும, சிலகாலத்தே குறைவாக வும், மற்றுஞ் சிலகாலத்தே சூன்னியமாகவும் காணப் படும். உள் நாட்டுக் கலகங்களினுலும் புறநாட்டுப் படை யெழுசசிகளினுலும நமது நாட்டுப் பண்டைச் சரித்திரங்களை ஆராய்சசிசெய்யப் போதிய சாஸனங் கள் இல்லாமற்போயின. அன்னியப்படை யெழுச்சியி ஞல் புராதன சிலாசாஸனங்கள், நிர்மாணங்கள் பல அழிந்துபோனமையால் சரித்திரக்காரர்கள், போது மான சரித்திர முகாந்திரமின்றி வெகுகாலம்வரை சேற்றில் நட்ட கம்பம்போல் ஆதாரமற்றிருந்தனர். சமீப காலமாகத்தான் சிலாசாஸன ஆராய்ச்சிவல்லோர் களிற் சிலர் பதிப்பித்த சாஸன வாராய்ச்சியினுற் புதிய

புதிய முகாந்தரங்களுண்டாகிச் சரித்திரம் சற்றே ஒழுங்குடன் ஏற்பட்டது. காலநிர்ணயம் சரித்திரத் திற்கு இன்றியமையாததால் அந்நிர்ணயம் சிலாசாஸன ஆராய்ச்சியின் மூலமாகவே கண்டு பிடிக்கப்பட்டது. ஒரு நாட்டுக்கு சரிவர சரித்திரம் இல்லாமற்போனால், அந்நாட்டின் பெருமையும் நாகரிகமும் மற்றுமுள்ள ஆற்றலுஞ் சரிவரத் தெரியமாட்டா. பாரததேச சரித்திரம் மிகவும் பழமையானது. கிறிஸ்து பிறப்பை ஒரு ஆதாரமாகக்கொண்டு சரித்திர முகாந்தரங்கள் முன்னும் பின்னுமாக இப்பொழுது அறியப்படுகின் றன. பூர்வம் நம் பாரதநாட்டில் விக்கிரமசகம், சாலி வாகனசகம் என இரண்டு சகங்கள் ஏற்பட்டுச் சரித்திர ஆராய்ச்சிக்கு வழித்துணையாக விருநதன. இநதிய தேச சரித்திரம் இப்பொழுது கிறிஸ்து பிறப்புக்கு முற்பட்ட, காலமென்றும் கிறிஸ்து பிறப்புக்குப் பிற் பட்ட காலமென்றும் இரண்டுகாலப் பிரிவுகொண் டுள்ளது. கிறிஸ்து பிறப்புக்கு முன் வேதகாலம், இதிகாஸகாலம், புராணகாலம், சரித்திரகாலம் என நான்குகாலங்கள் உண்டென சரித்திரக்காரர்களிற் சிலர் பிரித்திருக்கின்றனர். இலக்கிய அறிஞர் எத் துணை இலக்கியப் பிரமாணங்களைக் கொண்டு விளக்கி னும், சாஸன பரிசீலனையுடையார்க்கு இலக்கிய ஆராய்ச்சியில் நம்பிக்கையுண்டாதல் அரிதேயாம். என்றாலும், பழைய விலக்கியங்களிற் கண்ட சரித்திர வுண்மைகள் காலாநதரத்திற் கிடைக்கும் சாஸன வுதவி யால் பலம்பெற்று வருதலைக்காண நாம் பெருமகிழ்ச்சி கொள்கின்றோம். வேதகாலமானது கிறிஸ்து பிறப் புக்குச் சற்றேறக்குறைய ஆறுயிரவருடம் இருத்தல் வேண்டுமென்பது சிலர் அபிப்பிராயம். மற்றுஞ் சில

சரித வாராய்ச்சியோர் வேதகாலத்தை மூவாயிரத் தெண்ணூறு என்றுங் கூறுவர்.' பின்னுஞ் சிலர் வேத காலம் கி. மு. 2400 முதல் 1400 வரையிலுமென வரையறுத்திட்டனர். ஆரிய மக்களுக்குப் புராதன மானது இருக்குவேதம்; அவ்வாறே திராவிடமக்க ளுக்கு மிகப் பண்டைமையானது தொல்காப்பியம் என் பர். தொல்காப்பியனார், அகத்தியர் சீஷர்களிலொருவ ராகிய திரண தூமக்கினி எனும் நாமங்கொண்ட ஓர் இலக்கண நூலாசிரியர். இவர் இடைச்சங்கப்புலவரு ளொருவர். தொல்காப்பியம் கி.பி. எட்டாவது நூற் றுண்டில் இயற்றப்பட்டதென்பது டாக்டர் பர்னல் என்பவரின் துணிபு. இதை யொப்புவாரில்லை. இருக்கு வேதம், ஆரியர்களின் பண்டைக்கால ஒழுக்க வழக்க நாகரிகங்களை அறிவதற்கு எவ்வாறு கருவியாக வுள் ளதோ, அவ்வாறே, தமிழர்களின் பண்டைக்கால ஒழுக்க வழக்க நாகரிகங்களை உணர்தற்குக் கருவியா யிருப்பது தொல்காப்பியமேயாம். தொல்காப்பியத் திற்கும் முற்பட்டவர் தமிழரென்பது சொல்லாமலே யமையும். 'ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற் பட்ட தமிழர்' எனும் நூலொன்றை எழுதிய கனக சபைப்பிள்ளை தமிழர் மங்கோலிய வகுப்பினரென் றும் அவர்கள் வங்கநாடு வழியாகப் பாரதநாட்டிற் பிர வேசித்துத் தரை கடல் இருமார்க்கங்களினாலும் தென் னிந்தியா வந்தவர் எனக் கூறுகின்றார். தமிழர் ஆசிய மேனாட்டவரென சிலர் கூறுகின்றனர். சின்ன ஆசியா, அஸிரியா பிரதேசங்களினின்றும் கடல் மார்க்கமாகத் தென்னிந்தியாவினுட் பிரவேசித்தவர் களே தமிழர் என்பார் மற்றுஞ் சிலர். கங்கைக்கரையி லிருந்து ஈழமண்டலம் வரையிலுள்ள அநார்யரான

திராவிடருள் பலமரபினர் இன்றளவும் வேறு கலப்பின்றி ஒரேவகையான குணம் குறிகள் உள்ளவர்களாகத தோற்றுதலால் இவர்கள் ஆதியில் இந்தியா முழுவதும் பரவியிருந்தனர் என்பது உறுதியான கொள்கையே என்பர் செல்வக்கேசவராய முதலியார். தமிழர் இந்திய வடமேற்குக் கணவாய் வழியாகச் சிந்து நதிச் சமப் பிரதேசங்களில் வசித்து இடம் போதாத காரணத்தால் பிறகு கங்கைப் பிரதேசங்களில் குடியேறினார்கள் என சிலர் கூறுவர். எப்படியிருப்பினும், தமிழ்மக்கள் பல்லாயிரம் வருடங்களுக்கு முன்னரே நாகரீகம் அடைந்திருத்தல் என்பது வெள்ளிடைமலை. ஆகவே, தமிழ் பாஷையானது புராதன பாஷையென்பதும் இலக்கிய மறிநதவர்களின் துணிபு. ஆனால், நவீன ஆராய்ச்சியர்கள் அவ்வபிப்பிராயத்தைத் தாங்காமல், தமிழ் கிறிஸ்து பிறந்த சில நூற்றாண்டுகளுக்கு முன்னரே உண்டாயிற்றெனச் சிலரும், கி. மு. ஐந்தாம நூற்றாண்டிலேயே உண்டாயிற்றென மற்றுஞ் சிலரும், கி. பி. ஆறுவது நூற்றாண்டில் உண்டாயிற்றென இன்னுஞ் சிலரும் இயம்புகின்றனர். தமிழ்மக்கள் பழையகுடிகளே. இப்பழைய தமிழ்மக்களோடு வேறுபல மக்களும் தமிழகத்தே குடியேறி, அவர் வேறு தாம் வேறு என்றறியா வண்ணம் தமிழராயினர். இத்தமிழ்மக்கள் நாளடைவிற் பெருக்கமுற்றமையால், தமக்குப் போதுமான இடம் நாடுதல் காரணமாகத் தென்னாடுகளிற் புகுந்து ஆங்கு வாழ்ந்திருநத நாகர் முதலியோரை வென்று நாட்டைக் கைக்கொண்டனர் என்று சிலர் கூறுகின்றனர். தமிழகத்தில் வாழ்ந்த பூர்வகுடிகள் வில்லுவரும் மீனவர்களுமாவர். நாகர்களில் மறவர், எயினர், ஒலியர், ஓவியர்,

அருவாளர், பரதவர் ஆகிய பலர் உண்டு. இந்த நாகர் களினின்றுமே ஆரியர்கள் முதல்முதல் எழுதக் கற்றுக் கொண்டனர் என்னுங் காரணம்பற்றியே சமஸ்கிருதத்திற்கு தேவநாகரி என்ற பெயர் வநததென்று ஸ்ரீமான் கனகசபை அவர்கள் தெரிவித்துள்ளார். தமிழர்கள் ஆட்சிபுரிநத இடமே 'தமிழகம்' எனப்படும். 'வட வேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ் கூறு நல் லுலகு.' இத் தமிழ்மக்களுள் சேரரென்றும், சோழ ரென்றும், பாண்டியரென்றும் வழங்கப்படுவர். 'தமிழகத்தைத் தன் கைவசப்படுத்த முதன்முதல் முயன்ற தமிழ்மக்கள் குழுவிற்குத் தலைமைவகித்தவர், ஏனை யோரை நோக்கப் பழைமை வாய்நதிருந்தமையின் பழையர் என அழைக்கபபெற்றனர். இவர்களே சோழர்களாவர். இவர்க்குப் பின்வந்தவர், கொல்லி, நீலகிரி, முதலிய மலைகளைத் தங்களுக்கு வாழுமிட மாகக் கொண்டதற்கேற்பத் தம்மை 'வானவர்' என வழங்குவாராயினர். இவர்களே சேரராவர். சேர வமிசமே ஏனையவற்றினும் புராதனமென்று சிலர் அபிப்பிராயப்படுகின்றனர். வழக்கிலும 'சேரசோழ பாண்டியர்' என்று கூறப்படுவதால் சேரர் முன்னும் சோழர் பின்னும, பாண்டியர் கடையுமாக இருநதன ரென்பது கூறுதல் ஒக்கும்.

இங்கு கூறியவனைத்தையும் நன்காராயு மிடத்துத் தமிழ்மக்கள் இன்ன காலத்துக் குடியேறினர்க ளென நம்மனோரால் குறிப்பாகச் சொல்லமுடியாத நீண்டகாலந் தொட்டு அவர்கள் தமிழகத்தில் அருமை பெருமையுடன் மேம்பட்டு வந்தவர் என்பது தெள்ளென விளங்கும்.

பூர்வம் தமிழகம் பாண்டி, தென்பாண்டி, குட்

டம், கடம், கர்க்கா, வேன், புலி, பன்றி, அருண், அருவாவடதலை, சீத்தம், மலாடு, புனல்நாடு என பதின் மூன்று நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அக்காலத்தில் குமரிமுனைக்குத் தெற்கே பனைநாடு முதலிய நாடுகளும் குமரிக்கோடு, மணிமலை முதலிய மலைகளும் முத்தூர் கபாடபுரம் முதலிய ஊர்களும் பஃறுளியாறு, குமரியாறு முதலிய ஆறுகளும் இருந்தனவெனத் தமிழ் நூல்கள் கூறும். தமிழ் மக்கள் தமிழகத்தே அரசு புரிந்தகாலத்துப் பல்லவ வம்சத்தினர், இராஷ்டரகூட வம்சத்தினர், சாளுக்கிய வம்சத்தினர், தட்சிணத்திலும் தமிழகத்திலும் ஆதிக்கஞ் செலுத்திவந்தனர். வட இந்தியாவின் சரித்திரம் ஆராய்ச்சிக்கு வந்தமைபோலத் தக்ஷிண சரித்திரம் வரவில்லை யென்பதே நம்மனோரிற் நீண்ட காலத்துக் குறையாகும். வட இந்தியாவில் சந்திரகுப்தன், அசோகன், சமுத்ரகுப்தன் முதலிய சக்ரவர்த்திகள் தட்சிணத்தையும் தம் வயப்படுத்தி யாண்டுவந்த காலத்தும் தமிழகத்தில் தமிழ்மக்கள் சுதந்தரர்களாய் அரசியல் செலுத்தியேவந்தனர். தமிழகத்தே செங்கோலோச்சிய தமிழ் அரசவம்சம் மூன்றும் ஒரோர் காலத்துச் சிறப்புற்றும் மற்றோர் காலத்துச் சிறப்பு குன்றியும் வாலாயின. பல்லவ வம்சத்தினர் தமிழகத்தே யாதிக்கஞ் செலுத்தின காலத்துத் தமிழ்மக்களின் வீரம் குன்றியும், பல்லவ வம்சத்தவர்களின் வீரம் ஒடுங்கியகாலத்துத் தமிழ்மக்களின் வீரமும் ஜெயமும் நிறைந்தும்வந்தன. தமிழ் அரசியல்களை முதன் முதல் நாட்டிய முன்னோர் இன்னரென்றேனும், இவை ஸ்தாபிக்கப் பெற்ற காலம் இஃதென்றேனும் இதுவரை எவரும் அளந்து கண்டவரல்லர். வால்மீகம் போன்ற புரா

தன வடமொழிக்காவியங்களிலும், அசோக சக்கர வர்த்திபோன்ற மன்னர்களின் ஆதி சிலாலிகிதங்களி லும் இம்மூன்று தமிழ் நாட்டாரையும் பற்றிக் கௌரவ மான பிரஸ்தாபங்களே கேட்கப்படுதலால், இன்னோ ரது பழமையும் பெருமையும் ஐயமின்றி அறிஞர்க ளால் கொள்ளப்படுகின்றன.

சுருங்க உரைக்குமிடத்து படைப்புக்காலந் தொட்டு மேம்பட்டுவருங் குடிகள் இம்மூவேந்தரும் என்று பரிமேலழகர் எழுதிய முறையே நாமும் கூறு தல் பொருந்தும். தமிழ்மக்கள் அறத்தால் மிக்கோ ராகி வெற்றி மேம்பாடுகொண்டு இறைமாட்சி செய்து வாணிகத்துறையை வளம்படுத்தியும் செந்தமிழ் நிலை மையைச் சிறப்பித்தும சமயக் கொள்கையையும் நூல்களையும் விர்த்தி பண்ணினர். தமிழர்களின் கீர்த்தி கடல் கடந்த கண்டங்களுள்ளும் பெரு கிற்று. தமிழ்மக்கள் சிறிதுகாலம, ஆந்திரர்கள், பல் லவ வம்சத்தினர், இராஷ்டிர கூடர்கள், சாளுக்கி யர்கள் ஆகிய இவர்களின்மீது ஆதிக்கஞ் செலுத்தி, தக்ஷிணம் முழுமையும் ஆண்டுவநதனர். தவிர, வட நாட்டிலும், கங்கைக்கரையிலுள்ள நகரங்களையும் கைப் பற்றினதாகத் தெரியவருகிறது. தெற்கே, ஈழமண் டலத்தையும் (இலங்கை) கைப்பற்றித் தமிழ்மக்கள் அரசியல் செலுத்திவந்தனர். இம் முடியுடைய மன் னர் மூவர்க்கும் பலவேளிர் தலைவர்கள் இருந்தனர். இவ்வேளிர் தலைவர் பொருட்டு அம்மன்னர் மூவர்க் கும் இடைவிடாதுபோர் நடப்பதுண்டு. தமிழ்மக்கள் வாணிகத்துறையில் மிக்க வளம்பெற்றவர்கள். பழைய ரோமாபுரியையாண்ட அகஸ்டஸ், டைபீரியஸ், கிளா டியஸ் முதலிய சக்ரவர்த்திகளோடு போக்குவரவு சாத

ளங்களையும் தமிழர்கள் பெற்றிருந்தனர். குமரிக்கு அப்பால் கொற்கைவரையும் உள்ள கடலில் தமிழர்கள் ஏராளமாக முத்துக் குளித்து வநதனர். பழைய தமிழ்மக்கள் விவசாயம், கைத்தொழில், சித்திரம், வர்த்தகம், சிற்பம், சாஸ்திரம இவைகளில் மிக்க தேர்ச்சியுள்ளவர்கள். தமிழ்மக்கள் விவசாயத்தையும் நெசவுத்தொழிலையும் வெகு சிறப்புடன் போற்றிவநதனர். பருத்தி, பட்டு, கம்பளம், இவைகளின் நெசவு நடந்துவந்தன. எலிமோமத்தால் கம்பளிகள் நெய்யப்பட்டுவந்தன வென்றும் கூறப்படுகின்றது. முப்பது விதமான பட்டுதினுசுகள் இருநதன வென்றும் கூறப்படுகின்றது. மிளகு பொதிகளும், வாசனைத்திரவியங்களும், மாணிக்கமும், பொன்னும், சந்தனமும் அகிலும், முத்தும் பவளமும், பட்டும் பனிநீரும் இவை முதலிய பல சாமான்களும் துறைமுகத்திலிருந்து நாவாய் வழியாகப் பல தேசங்களுக்குத் தமிழ்மக்கள் ஏற்றுமதி செய்துவந்தனர். தமிழ்மக்கள் யவனருடனும் வாணிகஞ் செய்துவநதனர். 'கடிமதிவாயில் காவலிற் சிறந்த அடல்வாள் யவனர்' என்பதால் மதுரைக் கோட்டை வாசலில் யவனர் காவலிருந்தனர் எனத் தெரியவரும். தவிர, 'யவனர் நன்கலம் தந்த தண் கமழ் தேகம்' இதனால் யவனர் தமிழருடன் கலந்து உறவாடி வந்தனரென அறியலாம. தமிழ்மக்கள் தாங்களே கப்பல் கட்டிவந்தனர். கப்பல் கட்டுந்தொழிலில் தமிழ்மக்கள் மிக்க பேர்போனவர்கள். தமிழ்மக்கள் ஸாவகம், (ஜாவா) கட்டாஹம், (சுமத்ரா) காழகம், (பர்மா) ஈழமண்டலம் (ஸிலோன்) முதலிய விடங்களுக்குக் கப்பலிற் சென்று வாணிகம் நடத்தி வந்தனர். அக்காலத்தில் தமிழகத்தில் தொண்டி,

கொடுங்களூர், ஆளிமுகம், மாங்காடு, நீர்க்குன்றம், கோட்டயம், வைக்கரை, கோட்டாறு, குமரி, கொற்கை, புகார் முதலிய பல துறைமுகப் பட்டினங்கள் இருந்தன. கடற்கரைகளில் ஆங்காங்கே தீபஸ்தம்பங்கள் நாட்டப்பட்டிருந்தன. இவற்றைக் 'கலங்கரை விளக்கம்'* என்றழைப்பர். இத் துறைமுகங்களில் தமிழ்மக்கள் கப்பல் கட்டியும், கப்பல் வழியாகப் பலவகைப் பொருள்களைக் கொணர்ந்தும் தனப் பெருக்கஞ் செய்தனர். மேனாடுகளிலிருந்து ஏராளமான குதிரைகள் தமிழ்நாட்டுத் துறைமுகங்களில் வந்திறங்கும். சீனதேசத்திலிருந்து கர்ப்பூரம், குங்குமம், முதலியவைகளும் இறக்குமதியாயின. தமிழ்மக்கள் கோயில்கள் கட்டுவதிலும், கோட்டைகள் கட்டுவதிலும், நல்ல திறனுடையவர்கள். தமிழ் மக்கள் நல்ல தறுகணாளர்கள். ரோமபோர்ச் சேவகர்கள் தமிழரசரிடம் இராணுவவீரர்களா யிருநதனர். சிற்பமும் சித்திரமும் தமிழ்மக்களுக்குச் சர்வ சாதாரணமாகவே யிருந்தன. தமிழ்மக்கள் நல்ல கல்வி கேள்விகளுடையவர்களாய் அரசியலிலும், வாணிபத்திலும, தேர்ச்சியடைந்த நாகரிக முள்ளவர்களாகப் பொலிவுற்றிருந்தனர். தமிழ்மக்கள் வேற்றரசர் கீழ்வாழாது பிறப்புரிமை பெற்றுச் சுதந்தரத்துடனிருந்தனர். பண்டைத் தமிழ் மக்கள் தம் நாட்டையே பெரிதுங்கருதி, நாட்டின் வளமையையும், சிறப்பையும், ஒழுக்கத்தையும், அரசியலையுங் கவனித்து இன்புடன் வாழ்ந்து வந்தனர். தமிழரசர் குடிகளிடத்து இடையறாத அன்புடையராய் அரசாட்சி முறையை நன்குணர்ந்து நாட்டின் வளம் பெருகுதற்கான சாதனங்களைக் கையாடி வந்தனர். பிறநாட்டரசர் படையெடுத்து

வருவாரெனும் பயமின்றிக் குடிகள் உயிர்வாழுமாறு தக்கபுஜபலமும் ராணுவபலமு முடையவராயிருந்த னர். பண்டைத் தமிழ்மக்கள் புத்தமதத்தையும், சமணமதத்தையும் சைவ மதத்தையும் ஆதரித்து வந்தனர். சுத்த ஆர்யமதம், சுத்த தமிழ்மதம், ஆரி யத் தமிழ்மதம் முதலிய பல மதங்கள் தமிழ் நாட்டில் கடைச்சங்ககாலத்தில் அனுஷ்டிக்கப்பட்டு வந்தன. தமிழ்மக்களுக்கு கற்பகம், ஐராவதம், வஜ்ராயுதம், பல தேவர், சூரியன், சந்திரன், சிவன், சுப்பிரமணியன், காமன் முதலிய தெய்வங்களுண்டு. அத்தெய்வங் களுக்கு முறையே அருபியின் கோயில், முருகன் கோயில், பலதேவர் கோயில், திருமால் கோயில், வாசுதேவன்கோயில், காமன்கோட்டம், அருகப் பள்ளி, பௌத்தப்பள்ளி, ஸ்ரீகோயில் முதலிய பல கோயில்களிருந்தன. தமிழ் மக்கள் மத சுயாதீனத்தை யடைந்தவராய்த் தத் தமக்கு இஷ்டமான தெய்வங் களை வழிபட்டு வந்தனர்.

# II

## சோழவமிசத்தோர்.

சோழவமிசம் தமிழகத்தின் கண்ணே நெடுங்காலமாக விருந்த பழையதொரு வமிசமென்ப. அவ் வமிசத்தோருக்குச் சோழர் என்று பெயர். சோழரென்பார், தமிழகத்தின்கண் அரசியல் நடத்திய மூவேந்தருள் சோழநாட்டை ஆட்சி புரிந்தவராவார். சோழர் என்னும் பெயர் ஒரு வமிசத்திற் பிறந்தாரைக் குறிக்கும் பெயராகும். சோணாட்டைத் தாய் நாடாகக் கொண்ட குடிகளுக்கும் சோழர் என்பர். சோழர் குடி தமிழகத்தில் பழைய குடியாதலால் பன்னிருபாட்டியற் சூத்திரத்திலும்

> " குடிப்பெய ராவன கூறுங் காலைச்
> சேரன் சோழன் பாண்டியன் என்றிப்
> போல்வன பிறவும் பொருத்தங் கொளலே"

என்று கூறுதல் காண்க. பாண்டிய வமிசத்திலும் தொன்மை வாய்ந்த வமிசம் சோழவமிசம் என்றும், சோழவமிசத்திலுந் தொன்மை வாய்ந்தது சேரவமிசம் எனவும அறிஞர் கூறுவர். சோழவமிசத் தரசர்களின் பெயர்கள் மகா பாரதத்திற் காணப்படுதலாலும், தருமன் சேனைக்குப் பாரதப்போர் முடிவுறு மளவும் சோழன் ஒருவன் உதவிபுரிந்து வந்தனென்பதாலும் சோழவமிசத்தினர் தொன்மை வாய்ந்த வீரவமிசத்தவர்களென்பது வெளியாதல் காண்க. காத்யாயனரின் வார்த்திக சூத்திரத்திலும் சோழரைப்

பற்றி யிருத்தல் வெள்ளிடை மலை. பின்னர், அசோக சக்கரவர்த்தியின் சிலா சாஸனங்களிலும், பாலி பாஷையிலுள்ள மகா வம்சத்திலும் கிறிஸ்து பிறப்புக்குமுன் சோழர்களைப் பற்றிய குறிப்பு முண்டு. சோழர்களைப்பற்றிய விவரம் அக்காலத்திற் பல விருந்தும் அவை இக்காலத்தவருக்குப் புதுமையாகவே காணப்படும். ஈழமண்டலத்தார், (ஸிலோன்) சோழரைச் சோழியனென்றும், சோழநாட்டைச் சோழி என்றுங் கூறி வந்ததாகத் தெரியவருகிறது.

கிருதயுகத்தில் 20 சோழமன்னர்களின் வம்ச பரம்பரை யிருந்ததாகவும், திரேதாயுகத்தில் 17 சோழமன்னர்களின் வம்ச பரம்பரை யிருந்ததாகவும், துவாபரயுகத்தில் 2 சோழமன்னர்களின் வம்ச பரம்பரை யிருந்ததாகவும் திருவாலங்காடு சாஸனம் கூறுகின்றது. சோழர்களுடைய முன்னோர்கள் பிரம்மா, மரீசி, காசிபர், ருத்ராஜித், சந்திராஜித், சிபி ஆகிய இவர்கள் எனக் கூறுவர். சோழநாடு ஒவ்வோர் காலத்தில் பெருகியும் மற்றோர் காலத்திற் குறுகியும் வந்தமையால் சோணாட்டின் எல்லை வரையறுத்திடல் சாத்தியமன்று. ஆனால், கம்பர், தம் காலத்திலிருந்த சோணாட்டின் எல்லையைப் பின்வருமாறு கூறியுள்ளார்.

> ' கடல் கிழக்குத் தெற்குக் கரைபொரு வெள்ளாறு
> குடதிசையிற் கோட்டைக்கரையாம்—வடதிசையில்
> ஏணாட்டுப்பண்ணை யிருபத்து நாற்காதம்
> சோணாட்டுக் கெல்லை யெனச் சொல்.'

> கடல் கிழக்கு தெற்கு கரைபுரளும் வெள்ளாறு
> குடதிசையிற் கோட்ட கிரியாம்—வடதிசையில்
> ஏனாட்டும் பெண்ணை இருபத்து நாற்காதம்
> சோழநாட்டு எல்லை யென்று சொல். (ஔவை)

ஔவையும் பின்வருமாறு கூறியுள்ளார்.

சோணாடு நல்ல வளம் பொருந்திய நாடு என்பதற்குப் பல புலவர் பாடல்களே அத்தாட்சி.

'தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவதுஞ் சோழமண்டலமே' (கம்பர்.)

'சோழவளநாடு சோறுடைத்து' (ஔவை.)

'மேகம பொய்த்து வற்கட காலமாயினும் குடகுமலையினிடத்தே உற்பத்தியாகிப் பொய்யாமற் காலந்தோறும் வருகின்ற காவிரி தன் நீர் பெருக்கினால் கரையிலே பொன்னைக் கொழிக்கும்; குலைகளையுடைய தென்னையையும், குலைகளையுடைய வாழையையும், காயையுடைய கமுகினையும், மணம் வீசுகின்ற மஞ்சளையும், நல்ல மதுரமான பழங்களைக் கொடுக்கும் மாமரங்களையும், குலைகளையுடைய பனைகளையும், அடிபரந்த சேமபினையும் முளை இஞ்சியையும், காய்த்த செநநெற் கதிருடன் பலவாகிய ஊர்களையுடைய பெரிய சோழநாட்டில் தோட்டமூந தோப்புகளும், அத்தோப்புகளுக்குப் புறம்பாகிய பூஞ் சோலைகளையும், உயர்ந்த கரையையுடைய பொய்கைகளையும் அப்பொய்கைக் கரையிலே கோயில்களையும், சோற்றை வடித் தொழுக்கிய கஞ்சி யாறுகள்போல எங்கும் பரந்தொழுகி, இம்மைக்குப் புகழ்நிலை பெற்ற சொல் எங்கும் பரவா நிற்க, மறுமைக்கு அறம் நிலைபெற்றச் சோறிடுஞ் சாலைகளையும், தவஞ்செய்யும் அமண்பள்ளி பௌத்த பள்ளிகளையும் அமைத்துச் சோழர்கள் அரசாண்டு வந்தனர். நுரையைத் தலையிலே யுடைய ஆரவாரத்தையுடைய நீர், குளத்திலும் கோட்டத்திலும் புகுந்தோறும் நெல்லு மிகக் காய்த்து அத் தரையிலே விழுதலால், தமிழ்மக்கள் வளைந்து

நின்று அறிவாளின் வாயாலே நெல்லையறுத்து வரம்பு கட்டின வேலிநிலம் ஆயிரக்கலமாகிய செந்நெல்லின் விளையுட்டாகக் காவிரி பாதுகாக்கும் நாடே சோணு டென்ப. பாக்கத்தில் வாழும் பரதவர் அவ்விடத்தை வெறுத்துக் குறிஞ்சி நிலத்தே சென்று அவ்விடத் தைப் புகழவும், தேனுகிய நெய்யோடே கிழங்கையும் விற்றவர்கள் மீனினது நெய்யோடே நறவையும் கொண்டுபோகவும், இனிய கரும்போடே அவலைக் கூறுபடுத்தி விற்றவர்கள் மானினது தசையோடே கள்ளையும் கொண்டுபோகவும், குறவர் அரு நிலத்துப் பூக்களை வெறுத்து நெய்தலினது நறிய பூவாற்செய்த கண்ணியைச் சூடவும், காட்டிடத்துக் கோழிகள் நெற் கதிரைத் தின்னவும், மருதநிலத்தின் மனையிற் கோழி கள் தினையைத் தின்னவும், மலையிடத்திற்குரிய மந் திகள் கழியிலே மூழ்கவும், கழியிற் றிரியும் நாரை கள் மலையிலே கிடக்கவும், குளிர்ந்த வைப்புக்களை யுடைய நான்கு கூறுகிய நாடுகள் திரண்டு ஒரு குடை கீழ்ப்பட்டதற்கே சோணுடென்ப. மேகம தான் முகந்த நீரை மலையிடத்தே சொரியவும், மலையிற் சொரிந்த நீரை மீண்டும் கடலிலே பரப்புதற்காகவும் மாரிக்காலத்தே பெய்கின்ற மழைபோல, கடலருகின் கண்ணிருக்கும் பரதவருடைய அகன்ற தெருவிடத்து, அரிய காவலையுடைய பண்டசாலையின் கண்ணே எல்லை யறியாதபடி வந்து திரண்டு பின்னர் அப் பண்டசாலையிலே நின்றும் கடலிலே ஏற்றுதற்காகவும், கடலினின்றும் பண்டசாலையிலே இறக்குதற்காகவும் ஏற்பட்ட பட்டினங்களில் வானளாவிய கட்டிடங்களை யும், அவைகளை யணுகின படிகளையுடைய நெடிய ஏணிகள் சார்த்தின சுற்றுத் திண்ணையினையும், பல

கட்டுக்களையும், சிறுவாசலையும் பெரிய வாசலையும், பெரிய இடை கழிகளையும், மேகஞ் செறியும் உயர்ந்த மாடத்தில் தென்காற்று வருஞ் சாளரங்களையுங் கொண்டதே சோணுடென்ப.'

'மலையிலுள்ளனவும் கடலிலுள்ளனவுமாகிய மாட்சிமை யுடைய • பயனைக்கொடுக்கும் பெறுதற்கரிய பொருள்களையும் மாணிக்கம் முத்து சந்தனம் முதலியனவும் கொண்டுபோய் விற்றுத் திரிவாரும், அகன்ற காட்டுவழிகளில் கழுதைமீது மிளகுப்பொதி யெடுத்துக்கொண்டு போகின்ற பலரும், செறிந்த இருள் போகின்ற காலத்தே புலியினது முழக்கம்போலும் முழக்கத்தை யுடைய மத்தை ஆரவாரிக்கும்படி கயிற்றை வலித்து இறுகத்தோய்ந்த இனிய தயிரைக் கடைந்து வெண்ணெயை யெடுத்துத் தயிர்புள்ளியாகத் தெறித்த வாயையுடைய மோர்ப்பானையைப் பூவாற் செய்த சுமட்டைத்தலையிலே வைத்துக் காலையிலே மோரை விற்கும் ஆயச்சாதியிற் பிறந்த மக்கள் பலரும், மாரிக்காலத்தையுடைய விசும்பிடத்தே பரந்த மேகத்தையொப்ப வரகு வைக்கோலாலே வேய்ந்த அழகினையுடைய குடியிருப்பினையுடைய சிறிய ஊர்களிலே உழுதுண்பார் பலரும், குடியிருப்பு நிறைந்த உணவினையுடைய செவ்விய சாலாக வுழுகின்ற உழவுத் தொழிலை யுடையோர், உழவுத் தொழிலிலே பயின்ற பெரிய எருதுகளை வாயிலே நுகத்தைப் பூட்டிக் கொண்டு செல்பவரும், பெரிய கையினையுடைய யானைக்கு வளைந்துகிடக்கும் பூணைச்சேர்க்கும் வலிய கையினுடைய கொல்லர் பலரும் சோழநாட்டில் இன்புற்றிருந்தனர்.' (பட்டினப் பாலை)

இங்ஙனம் சோழர்களுக்குப் பூர்வ அரசர்கள்

இன்னுமொன்றும் அவர்கள் செயல்கள் இன்னவை யென்றும சரிவர அறியக்கூடவில்லை. ஆனால், சோழர் களையாண்ட முதற்சோழன் மனுநீதிகண்ட சோழனே என்பார். மனுநீதிகண்ட சோழனை முசுகுந்தன் என் பார். இவனுடைய காலம் இன்னதெனத் தெரிய வில்லை. சிலர் கிறிஸ்து பிறந்த முதனூற்றாண்டிலே முசுகுந்தன் ஆண்டிருக்க வேண்டுமென்பார். கரிகால் பெருவளத்தானது காலம் முதனூற்றாண்டென ஐய மறக் கூறப்படுவதால், முசுகுநதன் காலம் சுமார் கிறிஸ்து பிறப்புக்கு ஐந்துநூற்றாண்டு முன்னரே இருத்தல் வேண்டும. கரிகாலனுக்கு முன் நாலைந்து சோழமன்னர்களின் நாமம் வருவதால் முசுகுந்தன் காலம அக் காலவளவாகவே யிருக்கலாம். முசுகுந் தன் என்று கூறப்படும மனுநீதிகண்ட சோழனைப் பற் றிய செய்தி பெரிய புராணத்திற் பின்வருமாறு உரைக் கப்பட் டிருக்கின்றது.

'மனுநீதிகண்ட சோழனது குமாரன் ஒருநாள் ஆலயஞ் செல்லும்பொருட்டுத் தேரேறிப் போகை யில் ஒரு பசுக்கன்று துள்ளிவந்து அத்தேர்க்காலினடி யில் அகப்பட்டிறந்தது. அதுகண்ட தாய்ப்பசு கதறிச் சென்று, அரமனையின் ஆசாரவாசலில் ஆராய்ச்சி மணி யைக் கொம்பினால் அடித்தது. மணியொலிகேட்ட சோழன்வந்து, பசுவின் துன்பத்துக்குக் காரணமான செய்தியை யறிந்து, தன்மகனைக் தேர்க்காலிலிட்டுக் கொல்லும்படி கட்டளையிட்டான். மநதிரிகள் அதுசெய் யாமல் விலகச் சோழன் தானே தன்மகனைத் தேர்க்காலி லிட்டுக் கொன்றான். இச்சோழனைச் சிலப்பதிகாரத் தில் 'கறவை முறைசெய்தோன்' என்றும் 'குறைவி லுடம் பரிந்த கொற்றவன் முன்வந்த, கறவை முறை

செய்த காவலன் காணம்மாளை' என்றும் குறித்திருக்கின்றது. இசசோழனைச் சிலர் ஏலேலசிங்க னென்றும் கூறுவர். இது பொருந்தாது. சோழவம்சத்தரசர்கள் தங்களைச் சூரியகுலத்தவரென்று கூறுவர். இவனுக்குப் பிறகு கோச்சங்கண்ணர், பெருநற்கிள்ளி, வேற்பஃறடக்கைப பெருநற்கிள்ளி, 'உருவப்பஃறேரிளஞ் சேட்சென்னி எனப் பல சோழமன்னர்கள் இருந்ததாகவும் தெரியவருகிறது. கோச்சங் கண்ணரைப்பற்றிய செய்தி பண்டைய இலக்கியத்திற் காணப்படவில்லை. கோசசங்கண்ணர் திருவருளையே பெரும் பொருளாகப் பெற்ற சிவனடியார் என்றமட்டும் தெரியுமேயன்றி அவர் எக்காலத்தவர் என்பது தெரியாது. கோச்சங்கண்ணரையே சோழன் செங்கணன் என்று கூறவதானல் சேரன் கணிக்காவிருமபொறையைச் சோழன் செங்கணன் போர்புறத்துத் தோற்றுவித்துக் குடவாயிற் கோட்டததுச சிறையிற்கடத்தினன் என்றும், கழுமலத்திலும (சீர்காழி) போர்நடததினனென்றுங் கூறப்படுகிறது. கோச்சங்கண்ணர் சைவசமயத்தாருக்கும வைஷ்ணவ சமயத்தாருக்கும் பல கோயில்கள் கட்டுவித்தா ரென்றும கூறப்படுகிறது. இவர் கரிகாலனுக்கு முற்பட்டவரில்லை பென்றும் கரிகால் சோழனுக்குப் பின்னும் கி. பி. 890-ம ஆண்டிற் பட்டமெய்திய விஜயாலயச் சோழனுக்கு முன்னுமிருந்ததாகக் கூறபபட்டுள்ளதெனவும, கரிகாலன் கி. பி. இரண்டாவது நூற்றுண்டிற் செழித்து விளங்கினன் என்பது தெளியப்படுதலால், சோழன் செங்கணனும் கி. பி. 2-ம் நூற்றுண்டிற்கும் 6-ம் நூற்றுண்டிற்கும் இடையில் இருநதவனாதல் வேண்டுமெனவும் சரிதவாராய்ச்சிசெய்யும அறிஞர்கூறுவர். கரிகாற்

சோழனுக்குப் பிறகு சேட்சென்னி நலங்கிள்ளி, கிள்ளிவளவன், ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்றே ஸ்ரீமான் கனகசபைப்பிள்ளையவர்கள் அரச பரம்பரை காட்டியுள்ளார். அவர்காட்டிய அரச பரம்பரையில் கோச்சங் கண்ணரைப்பற்றிய குறிப்பு காணப்படவில்லை.

மற்றும், புறநானூற்றில் பாடப்பட்ட சோழர்களின் வரிசைகளிலும் கோச்சங் கண்ணரின் நாமம் இல்லை. புறநானூற்றில் பண்டைச் சோழமன்னர்களைப் பற்றிக் கூறிய விவரங் காண்க.

(1) சோழன் இராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி-இவன், யுத்தத்தில் வல்லவன். தேர்வண்மலையனென்பவனைத் துணையாகக்கொண்டு சேரமான் மாவெண்கோவோடும், பாண்டியன் கானப்பேர்தந்த உக்கிரப் பெருவழுதியோடும் நட்புடையோன். இவனைப்பாடிய புலவர் பாண்டரங் கண்ணனார், ஔவையார், உலோச்சனார். இவன் காலத்துப் புலவர் வடவணக்கன் பெருஞ்சாத்தனார்.

(2) சோழன் குராப்பள்ளித்துஞ்சிய கிள்ளிவளவன்-இவன் ஒரு சேரனோடு பகைத்துக் கருவூரை அடைந்தான். இவனைப்பாடிய புலவர் கோவூர்க்கிழார்.

(3) சோழன் குராப்பள்ளித்துஞ்சிய பெருந்திருமாவளவன்-இவன் பாண்டியன் வெள்ளியம் பலத்துத் துஞ்சிய பெருவழுதியோடு நட்புடையன். அவனைப் பாடிய புலவர் காவிரிப்பூம்பட்டினத்துக் கண்ணனார், உறையூர் மருத்துவன் தாமோதரனார், கோனாட்டு எறிச்சிலூர் மாடலன் மதுரைக்குமரனார்.

(4) சோழன் குளமுற்றத்துஞ்சிய கிள்ளிவளவன்—இவனது இராசதானி உறையூர்; மிக்க கொடையும்

வீரமும் உடையோன். செய்யுள் செய்தலில் வல்லவன். கருவூரை முற்றுகைசெய்து சேரனை வென்றவன். இவனைப் பாடிய புலவர் ஆலத்தூர்கிழார், வெள்ளைக்குடி நாகனார், ஆவூர் மூலங்கிழார், கோவூர்க்கிழார், இடைக்காடனார், ஆடுதுறை மாசாத்தனார், நல்லிறைய னார் முதலானோர் என்க.

(5) சோழன் செங்கணான்—இவன் சேரமான் கணைக்காலிரும்பொறையொடு போர்செய்து அவனைப் பிடித்துக்கட்டிச் சிறைப்படுத்தினான். பொய்கையார் பாடிய 'களவழிநாற்பது' என்னும் நூலின் தலைவன் இவனே. இவன்காலத்துப் புலவர் பொய்கையாழ் வார். வைணவ சம்பிரதாயத்துப் பன்னிரு ஆழ்வா ராதிகளில் முதலாழ்வர் இவரெனக் கூறப்படுகின்றது. சிலர் களவழிநாற்பது பாடிய பொய்கையார் வேறெனவும் முதலாழ்வார்களில் ஒருவரான பொய்கையார் வேறெனவும் கூறுவர்.

(6) சோழன் நலங்கிள்ளி—இவன் கவி செய்த லில் வல்லவன். பாண்டிய நாட்டிலிருந்த ஏழரண்களை அழித்துக் கைக்கொண்டு அவற்றில் தனது புலிக் கொடியை நாட்டினான். தனது தாயத்தாரோடு பகைத்து அவர்களிருநத ஆவூரையும் உறையூரையும் முற்றுகை செய்தான். மாவளத்தான் என்பவனுக்குத் தமையன். இவனுக்குச் சேட் சென்னியென்றும புட்பகை யென்றும் தேர் வண்கிள்ளி யென்றும் பெய ருண்டு. நெடுங்கிள்ளி யென்பவனோடு பகைமையுடை யோன். முன்னர், போர் செய்து வெற்றி கொள்ளு தலையே பொருளாகக் கொண்டிருந்த இவன் உறையூர் முது கண்ணன் சாத்தனார் சொல்லால் பின்பு அதனைத் துறந்து அறஞ் செய்தலையே மேற் கொண்டான். இவ

னைப்பாடிய புலவர்கள் உறையூர் முது கண்ணன் சாத்தனார், கோவூர்க்கிழார், ஆலத்தூர் கிழார்.

(7) சோழன் போர்வைக் கோப்பெருநற் கிள்ளி- இவன் தித்தனென்னுஞ் சோழனுடைய மகன். அவ னோடு பகைத்து நாடிழந்து வறுமையுற்றுப் புல்லரிசிக் கூழையுண்டிருந்தான். முக்காவனாட்டு ஆமூர் மல்ல னைப் பொருது கொன்றான். இவனைப் பாடியவர் சாத்தந்தையார்.

(8) சோழன் முடித்தலைக் கோப்பெருநற் கிள்ளி- இவன் சேரமான் அந்துவஞ் சேரலிரும் பொறை யோடு பகைமை யுடையவன். இவனைப் பாடிய புல வர் உறையூர் ஏணிச்சேரி முட மோசியார்.

(9) சோழன் வேற்பஃறடக்கைப் பெருநற்கிள்ளி- இவன் கரிகாலன் பாட்டனார். சேரமான் குடக்கோ நெடுஞ் சேரலாதனோடு போர்செய் திறந்தான். அக் காலத்து இவனைப் பாடிய புலவர் கழாத்தலையார், பர ணர்; இவன் பெயர் சோழன் வேற்பஃறடக்கைப் பெருவிறற் கிள்ளி யெனவும வழங்கும். தவிர, சோழன் நலங்கிள்ளி தமபிமாவளத்தான், சோழன் நெய்தலங் கானலிளஞ்சேட் சென்னி என வேறிரண்டு சோழர் களு மிருநதனர்.

(10) சோழன் உருவப்பஃறேரிளஞ் சேட் சென்னி- இவன் சோழன் கரிகாற் பெருவளத்தான் தந்தை. அழுந்தூர் வேளிடை மகட் கொண்டோன். வீரத திலும் கொடையிலும் சிறந்தோன். இவன் பெயர் இளையோனெனவும் வழங்கும. இவனைப் பாடிய புல வர் பரணர், பெருங்குன்றூர்க் கிழார் என்பர். சோழ வமிசம் இரண்டு மூன்று கிளைகளாகப் பிரிந்து உறையூர், புகார், கருவூர் முதலிய ஊர்களைத் தலை நகரங்களாகப்

பெற்றிருத்தல் வேண்டுமென்பதும் சிலருடைய அபிப் பிராயமாகும். கரிகாலன் தந்தை இளஞ்சேட் சென்னி இறந்தவுடன் உள்நாட்டுக் குழப்பமும், வெளிநாட்டுச் சண்டைகளும் இருந்தமை பற்றிக் கரிகாலன் உறை யூரைவிட்டு ஓரிடத்திலும் நிலைத்திராமல் அலைந்து திரி வாளுயினன். சோணுட்டு அரியணை ஏறுதற்குச் சோழ வமிசக் கிளைகள் குழப்பஞ் செய்திருத்தல் வேண்டும். மனுநீதி கண்ட சோழன் முதல் இளஞ் சேட் சென்னி வரையிருந்த சோழர்களைப் பற்றியும், சோழ மன்னர்களின் அரசியல்களைப் பற்றியும் பாரம் பரியத்தைப் பற்றியும் காலவளவைப் பற்றியும் ஆராய்ச்சி யொன்றும் ஏற்படவில்லை. எட்டுத் தொகை யுள் ஒன்ருகிய புறநானூறு என்னும் நூலிற் கண்ட வையேயன்றி மற்றப்படி பண்டைச் சோழ மன்னர் களைப்பற்றிக் கூறும சரிதம் ஒன்றுமில்லை. சோணுடும் பண்டைச் சோழர்களிடம உன்னதபதவியிலிருந்த தாகவுந் தெரியவில்லை. கரிகாலன் காலத்திலிருந்தே சோழ வமிசத்துக்கோர் உயர்வும சோணுட்டுக்கோர் வளமையும், சோழமக்களுக்கோர் திறனும் உண்டா யிற்றெனலாம. சோணுட்டின் இறை மாட்சிக்குக் கரிகாலன் படை மாட்சியே காரணம். கரிகாலன் காலந்தொட்டே சோழவமிச பரம்பரை சற்றே விளங்கி நிற்கும்.

## III

## முதலாவது கரிகாலன்

முதலாவது கரிகால் சோழனைக் கரிகால்வளவ னென்றும், கரிகால் பெருவளத்தான் என் றும், திருமாவளவன் என்றுங் கூறுவர். கரிகாலன் கி. பி. 35-ஆம் ஆண்டிற் பிறந்தவன் என்பது ஒரு சாரார் கொள்கை. கரிகால்வளவன் கி. மு. முதல் நூற்றாண்டின் இடைப்பட்ட காலத்து அரசாளப் புகுந்தவனாகற்பாலன் என்பது மற்றொரு சாரார் கொள்கை. கரிகாலன் காலம் கி. பி. 50–95. என்பது சில சரித்திரக்காரர்களின் துணிபு. கரிகாலன் நெடுங் காலமளவு உறையூர்க் கண்ணே அரசுவீற்றிருந்து, பின்னர்க் காவிரிப்பூம் பட்டினத்தை (புகார்)த் தலை நக ராக்கினான். தலை நகரம் அகநகரில் இருப்பது வாணி கத்திற்கும் அரசியலுக்கும் தக்கதல்ல வென்றே கொண்டு, கடற்கரையிலுள்ள புகார் பட்டினத்தை இராஜதானியாகச் செய்தான். கோழி நகர் எனக் காரணப் பெயர் பெற்ற உறையூரில் ஆட்சி புரிந்த சோழ மன்னர்களுள் இற்றைக்கு இரண்டாயிரம் வரு டங்களுக்கு முன்னர், வீரத்தினுங் கொடையினுஞ் சிறந்தோனாய் உருவப்பஃறேற் இளஞ்சேட் சென்னி என்பான் ஒருவன் இருந்தான். அவனை இளையோன் எனவும் கூறுவர். அவன் அழுந்தூர் வேள் மகளை மணந்து இன்புற்றிருந்தான். அவ்விருவருக்கும் பிறந்த பிள்ளையே கரிகாலன். கரிகாலன் நாளுக்கு நாள்

இளம்பிறைபோல் வளர்ந்து நல்ல கலைகளையும் கற்று, படைக் கலமும் பயின்று இளஞ்சிங்கம் போலிருக்கையில், இவன் தந்தை இளஞ்சேட் சென்னி இறந்து போயினன். இவனே அரசுக்குரிமை உடையவனாக யிருந்தும், அக்காலத்தில் அங்கு நிகழ்ந்த குழப்பமும் சண்டைகளும் உயிர்க்குக்கேடு பயப்பனவாகத் தோன்றவே, இவன் உறையூரைவிட்டுக் கருவூர்க்கோடி அங்குமிங்கும் அலைந்து திரிவானாயினான். உறையூரில் குழப்பம் குறைபடாதிருந்தமையால் பட்டத்திற்குரியாரைத் தேர்தல் கூடாதிருந்தது. காலங்கண்ட வழக்கம் போலப்பட்டத்துக் குரியாரில்லாராயின் யானையைக் கட்டவிழ்த்துவிட, அது தன் மிசை கொண்டு வருபவருக்கே அரசுரிமை கொடுப்பதுபோல, கரிகாலனும் கழுமலமென்னும் ஊரிலிருந்து யானையாற் கொண்டு வரப்பட்டு அரசாட்சிக் குரியவனாயினான். இப்படி யானையாற் கொண்டுவரப் பட்ட கரிகாலனிடம் கொண்ட பகைமையால் மனம் பொறாத தாயத்தார், இவனைச் சிறைக் கோட்டத்திட்டுக் காவல் புரிந்தனர். இவன் இருக்குமளவும அரசுரிமை பெறுதல் சாத்தியமில்லை யென்று கண்ட தாயத்தார் இவனிருந்த சிறைச்சாலையைத் தீக்கொளுவினர். இவன் அஞ்சாத நெஞ்சத்தனாய்ச் சிறைக்கள மதிலையும் கடந்து, வெளிச்சென்று, தன மாமன் இரும்பிடர்த்தலையாரின் துணைபெற்று, முன்னர் தன்னைப் பகைத்து நின்றோரனைவரையும் அடக்கி அரசுரிமையைக் கைக்கொண்டு செங்கோல் செலுத்தி வருவானாயினான்.

பகைவர் கொளுத்திய தீயைக் கடந்து; சிறைக் கோட்ட மதிலைத்தாண்டிப் புறஞ்சென்ற காலையில்

இவனது கால்கள் கரிந்து போயின. கால் கரிந்து போயினமையின் இவன், கரிகாலன் என்றழைக்கப் பெற்றான். தந்தை போலவே, இவனும * நாங்கூர் கண்ணே வாழ்ந்திருந்த உழுவித்துண்ணும் வேளாள ரிடத்துப் பெண்கொண்டனன். இவனுக்கு சேட் சென்னிநலங்கிள்ளி, நெடுங்கிள்ளி, மாவளத்தான் என ஆண்மக்கள் மூவரும் ஆதிமத்தியார் என்னும் ஒரு பெண்ணும் இருந்தனர். இக்கரிகாலன் அணிவது ஆத்திமாலை; கொடியில் புலியுருவம் பொறித்து நிற்கும்.

கரிகால் வளவன் உள்நாட்டுக் குழப்பங்களை அறக் களைந்து, அரசுரிமையைக் கைக்கொண்ட பின் வெளி நாட்டுக் கலகங்களை ஒழிக்க மனங்கொண்டனன். இவன் தமிழகம் முழுவதும் தன் குடைக்கீழ்ப்படுத்தக் கருதி சேரன் பெருஞ்சேரலாதன், பாண்டியன், வேளிர்தலைவன் முதலானோரை வெண்ணில் என்னும் ஊர்ப்புறத்தே வென்றும் குறுநிலமன்னர் ஒன்பதின் மர் கூடி வாகையில் இவனை எதிர்க்கையில் அவர்களை வாள்கொண்டு ஆட்படுத்தி அருவா (தென்னாற்காடு) நாட்டின்மீது அணிவகுத்துச் சென்றனன். இவன் குறும்பர்நாட்டை இருபத்துநான்கு கோட்டங்களாகப் பிரித்து அவற்றை வேளாளர்க்குக் கொடுத்து அங்கு குடியேற்றினான். அருவா நாட்டின் தலைநகராகிய கச்சியம்பதியிற் காமக்கோட்டத் திருப்பணி செய்து இவன் வழிபட்டான். பிறகு இவன் தமிழகத்தின் வட எல்லையாகவுள்ள வேங்கடத்திற்குச் சென்று அங் குள்ள வடுகரை வயப்படுத்தித் தனக்குரிமை செய்து

* நாங்கூர் என்பது,சீர்காழி தாலுக்காவிலிருப்பது

கொண்டனன். இவன், மீண்டும் பன்றி நாட்டிற் கதிபதியான எயினர் தலைவனையும் கீழ்ப்படுத்தி பாண்டியனையும் சோனையும் ஆட்படுத்தித் தன்னூர் வந்து சேர்ந்தான். முல்லை நிலத்தலைவரையும இருங்கோவேள் முதலிய ஐம்பெரு வேளிரையும் அடியோடு ஒழித்தனன். மீண்டும, கரிகாலன் வடநாட்டிற் சென்று வச்சிரநாட்டு மன்னனுடனும், மகதநாட்டு மன்னனுடனும், அவந்தி வேந்தனுடனும போர்புரிந்து, அவர்களால் கொடுக்கப் பெற்ற முத்துப்பந்தரையும், பட்டி மண்டபத்தையும், வாயிற்றோரணத்தையுங் கொண்டனன். கரிகாலன், கடல்மீதினும் ஆணை செலுத்தக்கருதி ஈழமண்டலத்தின் (இலங்கை) மீது படையெடுத்துச் சிங்கள மன்னனை வென்று அந் நாட்டுப் பன்னீராயிரம் குடிகளைச் சிறைகொண்டு தன்னூடு வந்து சேர்ந்தனன். இவன் காலத்தில் சோழராஜ்யம் இமயமலை முதல் குமரி முனை வரை பரந்து அதி உன்னத நிலையில இருந்தது.

கரிகாலன் சமயத்திற்கேற்ற சாதுரியபுத்தியும், தீரா வழக்கையும் தீர்க்கவல்ல பேரறிவும், நடுநிலை தவறாமையும், பகை, கொலை, களவு கடிந்து சமாதான மேவிட நாடாட்சி செய்யும வன்மையும உடையவனாக விளங்கினான். இவன், சிம்மாதனத்திலிருக்கையில், ஒருநாள், தமமுள் மாறுபட்டு வந்து, தன்னை இளையனென்றிகழ்ந்த முதியோர் பொருட்டு நரை முடித்துத் தான் முதியனாய்,வந்து அவர்கள் வழக்கைத் தீர்த்தான். அக்காலத்தில் அரசனுக்குதவியாக ஐம்பெருங் குழு வெனப் பெயர் பூண்ட ஐந்து அவைக்களங்கள் இருந்தன. மாஜனங்களும், பார்ப்பாரும், மருத்துவரும், நிமித்தரும், அமைச்சரும் குழீஇயிருப்பர். அரசன்,

எல்லாக்காரியங்களையும் தானே செய்தற்குப் பெரிதும் உரிமையுடையன் எனினும், ஐம்பெருங் குழுவினோடு ஆலோசித்தும், நல்லிசைப் புலவரைத் துணைகொண்டும் அரசியல் நடாத்தும் வழக்கிருந்தது. இவன் தன் கீழ் வாழ்வார் எவரும் தங்கள் தங்கள் மனநிற்கினிய சமயநெறியைச் சார்ந்தொழுகும உரிமையை யளித்திருந்தனன் என்பதற்கு அடையாளமாக புகார்நகரில் பலவகைப்பட்ட கோயில்களும், அமண்பள்ளிகளும், பௌத்தமடங்களும இருநதன. இன்னும், இவன் கீழ்க்குடிகள் மருவூர்ப்பாக்கத்தில் வாணிகங் காரணமாக வந்து குடியேறிய சோனகர், சீனர், சாவகரை உள்ளிட்ட புறநாட்டு மக்களோடு பகை சிறிது மின்றிக் கலந்துறவாடி வாழ்நதிருந்தனர். சிங்களநாட்டுப் பன்னீராயிரம குடிகளையும் மற்றுமுள்ளோரையும் கொண்டு பொன்னியாற்றுக்குக் (காவிரி) கரைகட்டி முடித்தான். காடுகளைவெட்டி, அக்காடுகளிருநத இடங்களிலெல்லாம் நாடுகளை உண்டுபண்ணினன். நீர் நிலைகள் பலதொட்டு நாட்டில் வளம பெருக்கினன். காவிரிநதிக்குக் கரை கட்டிப் பிறகு பற்பல வாய்க்கால்களையும் வடி மதகுகளையும் அமைத்திட்டுத் தண்ணீரை அழிவுறுமற் பாதுகாத்து, வேளான் வாழ்க்கையைப் பெருக்கினன். நாட்டை வளப்படுத்திய காரணமாகக் குடிகள் இவனுக்குப் பெருவளத்தான் என்று பெயரிட்டு அழைப்பாராயினர். இப்பொன்னி நதியால் வளமலிய சோணாட்டை அரசுபுரிநதமையின் சோழர்கள் 'வளவர்' எனப்பெயர் பெற்றனர்கள்.

கரிகாற் பெருவளத்தான் தன் நாட்டில் வாழுவோர் செல்வத்தாலும் நாகரீகத்தாலும் மேம்பட வேண்டும் என்பதிற் பெருநோக்கம் உற்றவன். காவிரி

யாறு இப்பொழுதுபோலக் கிளைகள் பிரியப்பெறுது, மரக்கலங்களின் போக்குவரத்துக்கு இசைந்தவண்ணம் ஆழ்ந்து அகன்ற முகத்துவாரத்தை உடைத்தாயிருந்தது. காவிரிப்பூம் பட்டினம் அற்றைநாளில் பட்டினப்பாக்கம், மருவூர்ப்பாக்கம் என இரண்டுகூறுகப் பகுக்கப் பெற்றிருந்தது. பட்டினப்பாக்கத்தே அரசவீதியும், ஆவணவீதியும், கொடித்தேர்வீதியும், முக்கியமானவை. வணிகர், மறையவர், உழுவோர், ஆயுள் வேதியர், காலக்கணிதர், தனித்தனி உறைப தலங்கள் பலவிருந்தன. மகதச் சிற்பரும், மராடக்கொல்லரும், யவனத்தச்சரும் கூடிக் கண்ணைக்கவரும் வனப்புடன் செய்தமைத்த அரசன் கோயிலும் இங்குதான் அமைக்கப்பெற்றிருநதது. அரண்மனையைச்சுற்றிலும் யானைப் பாகர், கடுங்கண்மறவர் இருக்கைகள் இருந்தன. கவிவாணர், பாணர், நாழிகைக்கணக்கர் வாழும் இடங்களும் இருநதன. கோட்டம், அம்பலம், மன்றம், வேள்விச்சாலை, எந்திரவாவிகளும் இங்கு அமைக்கப் பெற்றிருந்தன. மருவூர்பாக்கத்தே கலங்கரை விளக்கம் (லைட் அவுஸ்) துறைமுகத்தருகே கட்டப்பட்டிருந்தது. ஆயத்துறைகளும, பண்டசாலைகளும் கிடங்குகளும், பண்டமேற்று மேடைகளும அமைக்கப்பட்டிருந்தன. கூலவாணிகரும், பிட்டுவாணிகரும், கள் விற்போரும், பரதவரும், உமணரும், வணிகரும், வெண்கலக்கன்னரும், உருக்குத் தட்டாரும், தச்சரும், சித்திரகாரிகரும், சிற்பசாரிகளும், குழலர் பாணர் முதலிய இசைக்காரர்களும், குற்றேவல் செய்து உயிர் வாழ்பவரும், கைவினையாளரும் இங்கு வாழ்ந்து வந்தனர். இப்பாக்கத்து மருகுகளில்,

*    *    *    *    *

'நீரின்வந்த நிமிர்பரிப் புரவியுங்
காலின்வந்த கருங்கறி மூடையும்
வடமலைப்பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப்பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகுடல்துகிரும்
கங்கைவாரியும் காவிரிப்பயனும்
ஈழத்துணிவும் காழகத்தாக்கமும்' (பட்டினப்பாலை)

*    *    *    *    *

அரியவும் பெரியவுமான மற்றும் பலவகைகளும் தொகுக்கப்பெற்று விலை செய்யப்பட்டன.

காவிரிப்பூம் பட்டினத்தே எற்றுமதி இறக்குமதிகள் ஓய்வின்றி நடமாடிவந்தன.

நீரினின்று நிலத்தேறவும்
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி

*    *    *    *    (பட்டினப்பாலை)

இதைப் பட்டினப்பாலையிற் பரக்கக்காண்க. கரிகாற் பெருவளத்தானும் வருவாய் பெருகத் திருவிற் சிறந்தமையால், அவனைத் திருமாவளவன் என உலகம் கூறுவதாயிற்று. இவன் கல்வியின் அருமை பெருமைகளில் நன்கு தேர்ந்தவன்; கற்ற அறிஞரைத் துணைக்கோடலும், அவர்க்கு வேண்டுவபுரிந்து பாது காத்தலும், அவர்கள் இயற்றிடும் நூல்களுக்குப் பரிசு பல வளித்து ஏற்று நன்கு மதித்தலும் ஆன பல நல்லொழுக்கங்களை இவன் கொண்டிருந்தான். இவன் இரும்பிடர்த்தலையார் என்னும் பெரும்புலவரை நீங்காத்துணை கொண்டிருந்தான்: பாணர், நக்கீரர், மாமூலர், உருத்திரங்

கண்ணனார், கழாத்தலையார் முதலிய நல்லிசைப் புல் வர்களை நன்கு மதித்து, வேண்டுவன கொடுத்து இவன் பாதுகாத்து வந்தான். தனது இராஜதானியாகிய காவிரிப்பூம் பட்டினத்தையும் தன்னையும் தன் வீரத் தையும் தன் செங்கோன் முறைமையையும் சிறப்பித் துப் பாடிய உருத்திரங் கண்ணனாருக்குப் பதினாறு நூறாயிரம் பொன் பரிசளித்துப் பட்டினப்பாலையைக் கொள்வானாயினன். இவன் மகள் ஆதிமந்தியாரும் இன்னும் பல பெண்மணிகளும் புலமை முற்றி எண் ணிறந்த பாடல்களை பாடித் தமிழகத்தை அலங்கரித்த னர். புலவர்களின் புலமையைப் பரீட்சிக்கப் பட்டி மண்டபத்தையும் நூலாராய்ச்சி செய்து இன்புறத் தக்க கலைக்கழகங்களையும் இவன் அமைத்து வைத்த னன். அவன் காலத்தே மலையநாட்டையுடைய பேக னும், புறம்புநாட்டுத் தலைவனான பாரியும், மலையமா நாட்டுக் கோயிலூர் தலைவனான காரியும், பொதிய மலைத் தலைவனான ஆயும், குதிரைமலைத் தலைவனான அதியமானும், கொல்லிமலைத் தலைவனான ஓரியும், மலைநாட்டு நள்ளியும் ஒருப்பட்டிருந்தனர். இவர்கள் தமிழகத்தில் கடை எழு வள்ளல் எனப்படுவர். கபி லர், பரணர், நக்கீரர், இடைக்காடனார், மாமூலர் முத லான கடைச்சங்கப் புலவர்களும் சிறப்புற்றிருந்தனர். இவன் காலத்தே தமிழகத்தில் தோன்றின பலநூல் கள் வெளிவரலாயின. பத்துப்பாட்டு, நெடுநெதொகை, குறுந்தொகை, நற்றிணை, ஐங்குறுநானூறு, பதிற்றுப் பத்து, கலித்தொகை முதலிய பல புலவர்பாடிய பாடல் கள் வெளிப்போந்தன. கரிகாலன் காலத்தே இசையும் நாடகமும் தலை தூக்கியிருந்தன. இன்னிசைக்கருவி கள் பல இருந்தன. தமிழ்மொழிக்கும் பொன்னொளி

பெற்ற காலம் திருமாவளவன் காலமே எனக் கூற லாம். இவன் காலத்து பௌத்தமதக் கொள்கை தமிழ் நாட்டில் பரவியிருந்தும், மற்றும் வேறு சமயங் கள் பரவியிருந்தும் அவற்றில் விருப்பு வெறுப்பு இன்றி சைவ சமயத்தையே கைக்கொண்டிருந்தனன். சிலப்பதிகாரக்காதைக்கு நாயகனை கோவலன் புகார் நகரைவிட்டுக் கண்ணகியுடன் மதுரைக்குப் போகும் வரையிலும் புகார் நாட்டையாண்டுவந்தது கரிகாலனே எனக் கூறப்படுகின்றது. இக்காலத்தில் அரசர்கள் குடி களிற் சிலருக்குப் பட்டம் அளிப்பதுபோல அற்றை நாளிலும் செல்வமும் புகழும் படைத்த வணிகர்க்கு எட்டி யென்னும் பட்டமும் வேளாளருக்கு வேள் எனவும் அரசு எனவும், பாண்டிய நாட்டார் காவிதிப் பட்டம் பெறுதலும் வழக்கமாம். கரிகாலன் காலத்தே தமிழ் அணங்கு ஆனந்தக் கூத்தாடினுள். சோணுடு செழிப்புற்றிருந்தது.

# IV

## பிற்கால சோழ மன்னர்கள்

கரிகாலன் பெருவளத்தானுக்குப் பிறகு தோன்றிய சோழ மன்னர்கள் பெரும்பாலும் திறனற்றவர்களாகவே யிருந்தனர். கரிகாலன் காலத்துக்குப் பிறகு மீண்டும் சோணாடு மகோன்னத நிலையை யடைந்தது முதலாவது இராஜ இராஜ சோழன் காலத்தே தான். சோழவமிசம் கரிகாலனுக்குப் பிறகு ஏழு நூற்றாண்டுவரை மெலிவுற்று விஜயாலயச் சோழன்காலத்தி லிருந்து கொஞ்சங் கொஞ்சமாகச் சிறப்படைய லாயிற்று. கரிகாலன் இறந்தபிறகு அவன் பேரன் கிள்ளிவளவன் அரசாண்டான். கரிகாற் சோழனுக்குப் பிறகு சேட்சென்னி நலங்கிள்ளி, கிள்ளிவளவன், ராஜசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என அரசபரம்பரை வரலாற்றை ஸ்ரீமான் கனகசபைபிள்ளையவர்கள் காட்டியுள்ளார். அவன் காலத்தில் புகார் நகரத்தைக் கடல் கொண்டதென்றும் கூறப்படுகிறது. உறையூர் கண்ணேயிருந்த கிள்ளி ஒன்மதரைச்சேரன் செங்குட்டுவன் துணைகொண்டுவென்று அந்நகரைக் கைக்கொண்டவனை நலங் கிள்ளி என்றும் நெடுமுடிக்கிள்ளி என்றும் கூறுவர். அவன் காலத்தில் புகார்நகரம் பாழ்பட்டு மீண்டும் உறையூரே சோழராசதானியாயிற்று. பின்னர் எட்டு நூற்றூண்டுவரை சோணாட்டு வமிசத்தார் இன்னின்னாரென்றும் அவர்கள் காலம் இவ்வளவென்றும் அவர்கள் இறைமாட்சி இன்னதென்றும் தெரிய

வில்லை. வரகுணபாண்டியன் எட்டாம் நூற்றாண்டுக்குப் பிறகு சோனாட்டின் மீது படை யெடுத்துச் சோழனை இடவை யென்னு மிடத்தில் முறியடித்து இடவையும் வேமபிலியும கைக் கொண்டான். சோனாட்டின் பெரும பகுதி அக்காலத்தில் பல்லவ வமிசததாரிடம இருந்தது. சாளுக்கிய வமிசத்தாரும சோனாட்டின் மீது கண்ணோட்டஞ் செலுத்தி பல்லவ வமிசத்தாருடன் போர்புரியலானார்கள். பல்லவ வமிசத்தைத் தமிழகத்தே விட்டு வெளியேற்ற பாண்டியர்களும சோழர்களும் ஒன்று சேர்நதனர். ஆனால், பாண்டியர்கள் சோழர்களின்மீது கொண்ட பழைய பகைமை யால் பல்லவர்களைத் தாங்களே யோட்ட அவர்மீது போர் புரிந்தனர். அப்போரில் பாண்டியர்கள் அபஜயங் கொண்டனர். பாண்டியர்களின் அபஜயம சோழர்களைப் பலப்படுத்திற்று. விஜயாலயச் சோழனின் முன்னோர்கள் விட்டுபபோன சோனாட்டை மீண்டும் பலப்படுத்தக் கொஞ்சங் கொஞ்சமாகப் படைகளைத் திரட்டி ஒவவொரு நாடாகச் சேர்த்துக் கடைசியில் பல்லவர்களைத் துரத்தித் தஞ்சையையுங் கொண்டான். தஞ்சை வெகுகாலமளவு சோழர்களை விட்டுப் பல்லவர்களுக் குட்பட்டிருநதது. விஜயாலயன் தஞ்சையைச் சோழ இராஜதானியாக்கினான். தெற்கே குமரிக் கருகாமையிலுள்ள சுசீநதிரத்திலும், திருக்கோவலூர், காஞ்சி, உக்கல் முதலிய இடங்களிலும் விஜயாலயன் தனது ஆட்சிமுறை வெளிப்படச் சின்னங்களையும அமைத்தான். விஜயாலயன் முப்பத்தினான்கு வருடம அரசு நடாத்தினான். இவன் சிமமாதன மெய்தினகாலம் கி. பி. 846. பரகேசரிவர்மன் விஜயாலயனுக்குப் பிறகு அவன் மகன் இராஜகேசரி

வர்மன் (முதலாவது) ஆதித்யன் அரசாண்டான். விஜயாலயன் விட்டுப்போன வெற்றி வேட்கையை மேற்கொண்ட ஆதித்யன் வரகுண பாண்டியனைத் தோற்றுவித்து பல்லவ அபராஜிதனை வென்று சோணாட்டைப் பெருக்கினான். கொங்கு தேசதது இராஜாக்களையும் வென்று இவன் அவர்களை ஆட்படுத் தினான். இவன் இருபததேழு வருடகாலம் இராஜ் ஜியபரிபாலனஞ் செய்தான். இவன் காலம கி. பி. 881-907. இவன் மகன் வீரநாராயண பரகேசரிவர் மன் (முதலாவது) பராந்தகன்.

# சோழ வமிச விருட்சம்

விஜயாலயன் (பரகேசரிவர்மன்)

ஆதித்யன் (முதலாவது)

பராந்தகன் (907—947. கி. பி.)

- இராஜாதித்யன் (கி.பி. 949-50)
- கந்தராதித்யன் (கி.பி. 956-957)
  - மதுராந்தகன் (பரகேஸரி உத்தமசோழன்)
- அரிஞ்சயன் (மதுரைக்கொண்ட சோழன்)
  - பராந்தகன் (இரண்டாவது) (பரகேசரி சுந்தரசோழன்)
    - ஆதித்யன் (இரண்டாவது) (கரிகாலன் இராஜகேஸரி)
    - குந்தவையார் (பல்லவாரயர் வாண்டய தேவரை மணமுடித்தாள்)
    - இராஜராஜன் (முதலாவது) (கி.பி. 985-1013.)
- அரிகுல கேசரி (இளங்கோ)

இவன் பட்டத்திற்கு வந்த காலத்தில் சோழநாடு தெற்கே பாண்டிய நாடுவரையிலும் மேற்கே கேரளம் வரையிலும், வடக்கே கிழக்கு சாளுக்கியர் நாடுவரையிலும் இருந்தது. கி. பி. 910-ஆம் ஆண்டில் பராந்தக சோழன் பாண்டிய மன்னனான இராஜசிம்ஹனைப் போரில் வென்று தனக்காட்படுத்தினான். இவன், கேரள மன்னனுடன் விவாக சமபந்தஞ் செய்து அவனைத் துணைகொண்டான். சோழ நாட்டிற்கு வடமேற்குப் புறத்திலிருந்த பாணர்களைவெல்ல, அவர்கள்மீது தண்டோபாய மெடுத்துச் சென்றான். வடக்கேயுள்ள வைதும்பர்களையும் கீழ்ப்படுத்திச் சோழ நாட்டிலும், சோழநாட்டைச் சுற்றிலுமுள்ள வெளி நாட்டிலும் இவன் ஜயஸ்தபம நாட்டினான். பராந்தகச் சோழன் நல்ல மதப்பற்றுகொண்டவன். சைவமதத்தினர் சொல்லொணு நன்மையைப் பெற்றனர். இவன், தென்கைலாயம் என்று கூறப்படும் சிதம்பர க்ஷேத்திரத்திலுள்ள நடராஜரின் சிற்சபை விமானத்திற்குப் பொன் பூசு கொடுத்து அகமகிழ்ந்தனன். இலங்கைமீது படையெடுத்துச் செல்லவேண்டுமென்றிருக்கையில் பராந்தகன் இம் மண்ணுலகைவிட்டு விண்ணுலகேறினன். பராந்தகனின் தேவியார் கோகிளாந்திகள், இராஜாதித்யனின் தாய். பராந்தக சோழனின் மூத்தகுமாரனை இராஜகேஸரிவர்மன் இராஜாதித்யன் பிறகு பட்டமெய்தினன். இராயிரவான் தேவி அம்மனார் இவனுடைய தேவி. இவன் காஞ்சிமா நகருக்குச் சமீபத்தேயுள்ள தக்கோலம் என்னுமிடத்தில் நடந்த போரில் அமோகவர்ஷரின் மருமகனான கங்க நாட்டுத்தலைவன் பெருமானடிபூதுகனல் கொல்லப்பட்டான். இச் சோழமன்னன் இறந்தது காரணமாக

பூதுகன் சோழநாட்டிற் புகுந்து பல கோட்டங்களைக் கைக்கொண்டு காஞ்சிமா நகரையும் சுவாதீனப் படுத்திக்கொண்டான். இவன் தஞ்சைமீது படையெடுத்து வரவே, பராந்தகரின் இரண்டாவது குமாரரான கந்தராதித்யன் மாற்றான் படை வாராதபடி தஞ்சையைக் காப்பாற்றினான். கந்தராதித்யன் தஞ்சையில் ஆட்சி செலுத்தி வந்தானென்பதைத் திருவிசைப்பாவில் காண்க. இவன் இறந்த பிறகு இவனுடைய மனைவியார் தஞ்சைஜில்லாவிலுள்ள கோனேரி ராஜபுரத்தில் ஒரு கோயிலைக்கட்டி அக்கோயிலில் அரசனின் உருவச் சிலையையுஞ் செய்து வைத்தாள். அவ்வுருவச்சிலை ஆங்கு இன்றும் காணப்படும். இவனுடைய மகன் அரிஞ்சயன் சிலகாலம் ஆண்டபிறகு அவன் மைந்தன் சுந்தரசோழன் (இரண்டாவது பராந்தகன்) பட்டமெய்தினன். இவனைப் பொன்மாளிகைத்துஞ்சின தேவன் என்பார். இவன் பட்டத்திற்கு வந்ததும் பாண்டிய நாட்டு மன்னனை வென்று அதைச் சோழநாட்டுடன் சேர்ப்பித்தான். இவனுடைய போர்வீரன் சிறிய வேலன் மிக்க வீரங்கொண்டவனென்பது ஈண்டு குறித்தல் நலம். சுந்தர சோழன் மைந்தன் இரண்டாவது கரிகாலன் ஆட்சிபுரிந்து வந்தான். பிறகு பரகேஸரி வர்மன் உத்தம சோழன் ஆண்டு வந்தான். இவன் இராஜராஜன் பட்டத்திற்கு வரமளவும் சோழநாட்டு அரசியலை நடத்தி வந்தான். முதலாவது கரிகாலனுக்குப் பிறகு இராஜராஜனே வெற்றி மேம்பாடுகொண்டு சோழநாட்டைப் பரப்பித் தமிழகத்தை ஒரு குடைகீழ் ஆண்டுவந்தான்.

# V

## இராஜ இராஜன்

இரண்டாவது பராந்தகனான சுந்தர சோழன் அரசாண்ட பிறகு அவன் மூத்தகுமாரனும் இளம்பிராயத்திலே வீர பாண்டியனோடு போர்புரிந்தோனுமாகிய (ஆதித்தன் 11.) இரண்டாங் கரிகாலன் அதிக காலம் அரசாண்டதாகத் தெரியவில்லை. ஆனால், இரண்டாவது ஆதித்ய கரிகாலன் காலத்தில் பிரபாகர மதம் என்னுமோர் சமயம் இருந்ததாகத் தெரியவருகிறது. பூர்வ மீமாம்ஸைக்கு வியாக்கியான நூல் பிரபாகரம் என்றும் அதைப் பிராம்மணர் பலர் செய்தனரென்றும், அங்ஙனம் செய்தவர்களுக்கு ஆதித்ய கரிகாலன் விசேஷ மான்னியங்களைக் கொடுத்தானென்றும் தெரியவருகிறது. இவனுக்கு ஓர் மகனிருந்தான். அவன் பெயர் கரிகால கர்ணன். இராஜராஜனுடைய காலத்தில் வசித்தவன். இராஜராஜனுடைய மூத்தவன் ஆதித்ய கரிகாலன், இலங்கை மன்னன் நான்காவது மகிந்தரன் இவர்கள் சம காலத்தவர்கள். அவன் ஆண்ட காலம் கி. பி. 975-991. அவன் பிறகு சுந்தர சோழன் உடன் பிறந்தோனான மதுராந்தக உத்தம சோழனே அரசு செலுத்தினான். அவனை பரகேசரிவர்மன் கார்ந்தராத்திய மதுராந்தக உத்தமசோழன் என்பார். இவன் பட்டத்திற்கு வருங்காலை சோழநாட்டில் இவனை வேண்டாது பல குடிகள் சுந்தர சோழனின் இளையகுமாரன் இராஜராஜனையே வேண்டி, உள்நாட்

டுக்கலகம் விளைக்க முயன்றனர். அஃதறிந்த இராஜ ராஜன் அரசினை விரும்பாது குடிகளை யடக்கி உத்தம சோழனுக்கே பட்டங்கட்டு வித்தான். சோழநாட்டு அரசியல் நன்மையைக் குறித்துச்செய்த இராஜ இராஜ னின் செயல் மெச்சத்தக்கது. இராஜ ராஜனுக்குச் சிறு பிராயத்தே அருண் மொழிவர்மன் என பெயருண் டாயிற்று. சின்னஞ் சிறுவயதிலிருந்தே குடிகள் இவ னிடத்தில் மிக்க அன்புகொண் டிருந்தனர். வயதுக்கு மேம்பட்ட அறிவும் வல்லமையும் பெற்றிருந்ததினல் இவனுடைய பெருமை நாடெங்கும் பாவிற்று. உத்தம சோழன் அரசு செலுத்துகையில் இவன் இளங்கோ வென விளங்கி வந்தான். இராச்சிய பரிபாலனத்தை நடத்தப் போதுமானவயது இவனுக்குவாரததினலும், தன்னினும் முதியோன் அரச பரம்பரையி லிருப்பதி னலும் இவன் அரியணை ஏறுதற்கு உரிமை யுடையவ னக யிருந்தும் இராஜ்யபாரத்தை வகிக்க உத்தம சோழனிடம் கொடுத்தான். உத்தமசோழனும் இராஜ ராஜனின் பெருந்தன்மையை மெச்சித் தன் சந்ததி யார்க்கு அரசு கொடுக்காமல் இராஜ இராஜனுக்கே முடிசூட்டி மண்ணுலகைவிட்டு விண்ணுல கெய்தினன். இராஜ இராஜன் பிறந்தவுடனே பூமியைச் சுமக் கின்ற ஆதிசேஷனின் பத்தினிமார்கள், 'பூமிபாரத்தை யொழிக்கவந்த வள்ளல்' எனக்கூறி ஆனந்தத் தாண் டவ மாடினர் என சிலாசாஸனம் கூறும்.

இராஜராஜன் பட்டத்திற்கு வந்தகாலத்தைப் பற்றிய வாதம் இன்னும் நீங்கினபாடில்லை. இராஜ இராஜனுடைய காலம் கி. பி. 949-1015-என்பதாகச் சிலர் கூறுகின்றனர். இராஜ இராஜனுடைய மூத்த பாட்டனான இராஜாத்தியன் (முதலாவது பாந்தக

னின் மூத்தப்பிள்ளை; அரிஞ்சயனின் தமயன்) கி. பி. 949-ம் ஆண்டுக்குச் சற்று முன்னரே இராஷ்டிரகூட வம்சத்தினனான மூன்றாவது கிருஷ்ண னென்பவனால் போரில் கொல்லப்பட்டா னாகையால் இராஜ ராஜ னுடைய காலம் கி. பி. 949-ம் ஆண்டாக யிருத்தல் கூடாது. தவிரவும், கிழக்கு சாளுக்கிய வம்சத்தின னான விமலாதித்யன் வெகு காலமளவு தஞ்சையில் இராஜ ராஜனால் சிறைப்பட்டிருந்து பிறகு இராஜ இராஜ னுடைய மகன் இராஜேந்திரனால் விடுபட்ட காலத்திற் குப் பிறகு ஏழாண்டளவு இராஜ ராஜன் அரசு புரிந் தமையால் அவருடைய காலம கி. பி. 1015-க்கு முன் னரே தானிருத்தல் வேண்டும். இராஜ இராஜர் பட் டத்திற்கு வந்தகாலம் கி. பி. 1004-05-ம் ஆண்டா கத்தானிருக்க வேண்டுமென்று ஒரு காலத்தில் சரித் திரக் காரர்களால் நிர்ணயிக்கப்பட் டிருந்தது. ஆனால், இராஜ இராஜனுடைய அரசாட்சி காலததே வெட் டப்பட்ட சிலாசாதனங்களால் அக்கால நிர்ணயம் தவறெனப் பின்னர் தீர்மானிக்கப்பட்டது. 1890-ம் ஆண்டில் திருவல்லம் என்னும் ஊரில் கண்டுபிடிக்கப் பட்ட சிலாசாதன மொன்றில் இராஜ இராஜனுடைய அரசாட்சியின் ஏழாம் ஆண்டில் சந்திர கிரகணம ஒன்று சம்பவித்ததைப்பற்றிய குறிப்பு ஏற்பட்டது. இதைப் பற்றிய ஆராய்ச்சியில் டாக்டர் ப்ளீட் (Dr. Fleet) பின்வருமாறு கூறுகிறார். 'இராஜ இராஜனுடைய காலத்தில் இருமுறையே சந்திர கிரகணம கி. பி. 991-ம்ஆண்டிலும் கி. பி. 1010-ம் ஆண்டிலும் உண் டாயிற்று.' கி. பி. 991-ம் ஆண்டில் உண்டான சந்திர கிரகணத்தைப்பற்றியே தான் திருவல்லம் சாதனம் குறிக்கிறதென அவர் அபிப்பிராயப்படுகிறார். இவ்

வாருய்ச்சி உண்மையானால் இராஜ இராஜர் சிம்மாதன மெய்தினகாலம் கி. பி. 984-5-ம் ஆண்டாகத்தானிருக்க வேண்டும். கி. பி. 985-ம் ஆண்டின் ஜூன் மாதம் 25-ந் தேதிக்கும் ஜூலை மாதம் 25-ந் தேதிக்கும் இடையேயுள்ள ஒரு நாளில் இராஜ இராஜன் முடி சூட்டப் பட்டிருத்தல் வேண்டுமென விளங்கும். தவிர, இராஜ ராஜருடைய 14-ம் ஆண்டில் ஆனிமாதத்து திருவோண நட்சத்திரத்திற் கூடிய சோமவாரத்திற்குச் சரியான கி. பி. 999-ம் வருடம் ஜூன் மாதம் 5-ந் தேதி திங்கட் கிழமை யன்று இராஜராஜர் திருநாள் என்பதைக் கொண்டு இராஜராஜர் கி. பி. 985-ம ஆண்டில் சிம்மா தன மெய்திருக்க வேண்டுமென தீர்மானிக்கப்படு கிறது. சிலாசாதன வாராய்ச்சியின் மூலமாகவே இராஜ இராஜருடைய ஆட்சி முறைமையைப் பற்றி யும் அன்னவர் அருமை பெருமைகளைப் பற்றியும் அறிய இடமுண்டு. இராஜ இராஜன் சோழன் உலா என்னும் தமிழ்நூல் நம் உதவிக்கு ஒரு சிறிதும் பயன் படக்கூடியதாகவில்லை. இராஜ இராஜராஜன், சிம்மா தன மெய்துங்காலம் வரையில் நாட்டின் அரசியல் முறைமையைப்பற்றியும், படை, குடி முதலியவை களைப்பற்றியும் வெளிநாட்டு இராஜீய நிலைமைகளைப் பற்றியும் தீவிரமாக ஆராய்ச்சி செய்து வந்தனன்.

இராஜ இராஜனுடைய சிலாசாதனங்கள் பெரும் பாலும் கோயில்களுக்குக் கொடுத்த மான்னியங்களைப் பற்றியும் கைங்கரியங்களைப்பற்றியும் சமய வழியாகத் தர்மஞ் செய்ததைப்பற்றியுமே குறிக்கும். இராஜ இராஜன் அரசாட்சிக்குவந்து ஒன்பதாண்டு வரையி லும் சிலாசாதன வாராய்ச்சியில் அவனைப்பற்றிய விஷ யம் ஒன்றுமில்லை. இராஜ இராஜன் ஸ்வபாவமாகவே

வெகு சுறு சுறுப்பும் தீர்க்காலோசனை யுள்ளவனு மாகையால் ஒன்பதாண்டு வரை சும்மாயிருந்திருக்க முடியாது. தவிர, தமிழகத்தை ஒரு குடை கீழ் நடத்திவரவேண்டுமென்னும் பேரவா கொண்ட இராஜ இராஜன் அரைக் கணமும் சும்மாயிருநதிருத் தல் கூடாது. சோழநாட்டைச் சுற்றியுமுள்ள பல்லவ வமிசத்தார், சாளுக்கிய வமிசத்தார், இராஷ்டர கூடர்கள், பாண்டியர்கள், சேரர்கள் முதலானோர்க ளுடைய இராஜ்ய நிலைமைகளை யறிந்து தன் நாட்டின் படைகளைப் பலப்படுத்துவதில் இராஜ இராஜன் பெரி தும் கருத்து கொண்டிருந்தான். பாண்டிய நாடு மீண் டும கிளர்ச்சி செய்யவாரமபித்தது. சாளுக்கியர்களும் கங்க வம்சத்தார்களும் ஒன்று சேர பிரயத்தனஞ் செய்து கொண்டிருநதனர். சேரர்கள் தங்கள் நாட் டைப் பலப்படுத்த முயன்று வநதனர். இத்தகைய வெளிநாட்டு நிலைமையில் பரந்த இராஜ்யத்தை ஸ்தா பிக்கவேண்டுமென்னும அவா கொண்டிருக்கும் ஒரு இராஜ்யாதிபதி எங்ஙனம் சும்மாயிருக்க முடியும்? ஆகவே, இராஜ இராஜன் தன் உள் நாட்டுப் படை களைப் புதிதாகத்திரட்டிப் பலப்படுத்தி சோழநாட்டுப் பெருமையைப் பிரகாசிக்கச் செய்யலானான். சோழ நாடு அவன் காலத்தில் பரந்து மிக்க பொலிவுடனிருந் தது. சோழர்களும் மிக்க இராஜ விசுவாஸமும் தேசாபிமானமுங் கொண்டு அறத்தின் வழிவந்த வர்களாயிருந்தனர்.

## VI

# இராஜ இராஜன் போர்ச்செயல்கள்

இராஜ இராஜன் சிறுபிராயத்தே பல்வகைப் பரீட்சையும் படைக்கலப் பயிற்சியும் பெற்று வந்தமையால் அக்காலத்தில் இவனையொத்த வீரர்கள் தமிழகத்திலும் அதைச் சுற்றியுள்ள வெளிநாடுகளிலு மில்லை. சோழர்களுக்கும் பல்லவ வம்சத்தினர்களுக் கும் வெகுகாலமாகப் பகைமை யிருந்தபோதிலும் இராஜ இராஜனுடைய தமக்கை ஆள்வார் பிராந்தகன் குந்தவை பிராட்டியார் பல்லவவம்சத்தரசனை பல்லவ ராயர் வாண்டயதேவரை மணமுடித்த பிறகு இவ்விரு வம்சமும் ஒன்றுபட்டது. என்றாலும், இராஜ இராஜன் சத்துரு சங்காரத்தின் பொருட்டுத் திக்கு விஜயஞ் செய்கையில், பல்லவராயரும இராஜ இராஜனுக் குக் கப்பங்கட்டி வந்தார். ஆந்திர தேசத்திற்குத் தென் கிழக்காயுள்ள பெரிய மண்டலத்தைப் பல்லவ வம்சத்தவர்கள் ஆண்டுவந்தனர். அவர்கள் தொண் டைமண்டலத்தையே பெரிதும் போற்றிவந்தனர். காஞ்சிமாநகரே அவர்களுக்கு வெகுகாலமளவு தலை நகராக யிருந்தது. ஐந்தாம் நூற்றாண்டிலும், ஆறாம் நூற்றாண்டிலும் பல்லவ வம்சத்தினர்களின் ஆதிக் கம் மிகவும் பெருகியிருந்தது. மஹேந்திர பல்ல வர், நரசிம்மவர்மன் முதலிய பல்லவ அரசர்கள் மிக்க கீர்த்தி பெற்றவர்கள். நிற்க, இராஜ இரா ஜன் பட்டத்திற்குவந்த எழாண்டில் இவர் இராஜ

கேஸரிவர்மன் எனப் பெயரிடப்பட்டார். இராஜ கேஸரிவர்மன், பரகேஸரிவர்மன் என்னும் இவ் விரண்டு பட்டங்களும் சோழ மன்னர்களுக்குள்ளே மாறி மாறி வருவன. இராஜ இராஜன் பட்டத்திற்கு வந்த பன்னிரண்டாம் ஆண்டில் அவர் மனோரதம நிறைவேறுந் தருணம் சம்பவித்தது. சோழநாட்டு இராஜ தூதுவர் ஒருவரைச் சேரமன்னன் துன்புறுத் தினு னென்ற செய்தி இராஜ இராஜருடைய செவிக் கெட்டினதும், உடனே, அதுவே காரணமாகச் சேர மன்னனைத் தண்டிக்க அவர் யுத்த கோலங் கொண் டார். சேரர்களைக் காந்தளூர்ச் சாலையில் வெற்றி பெற்ற காரணமாக இராஜ இராஜனுடைய சிலா சாதனங்களில் 'காந்தளூர்ச்சாலை கலமறுத்தருளி' என்று வெட்டப்பட்ட குறிப்பு காணலாம். மரக்கலப் படையின் மாட்சியால் கடற்றலைமையை இராஜ இராஜன் அக்காலத்து வகித்திருந்த சிறப்பு, சேரர்மீது கொண்ட வெற்றியே விளங்கவைக்கும். இராஜ இரா ஜன் கடல்வழியாகவும், நிலவழியாகவும் பகைவரை வெல்லத்தக்க தரைப்படையும் கப்பற்படையும் உடை யவனுகவே யிருந்தான். கடலை அரணுகக் கொண்டு இடர் விளைத்த பகையரசரை, எண்ணிறந்த மரக்கலங் கள் மூலம் படையெடுத்துச் சென்று இராஜ இராஜன் வெற்றிகொண்டான். இராஜ இராஜனுடைய படைத் தலைவர்களி லொருவரான அபிரமாயன் இக்கடற் போரில் காண்பித்த தீரச் செயலுக்கு வெற்றிப் பட்ட மும் பெற்றுர். தவிர, பஞ்சவன் மாராயன், நராகண் கிருஷ்ணன் ராமன் என சேனுதிபதிகளுமிருந்தனர். 'ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார் ஸ்ரீராஜ ராஜதேவர் பெருந் தரம் உய்யக்கொண்டார் வளநாட்டு வெண்ணுட்டு

கோளாந்தக சதுர்வேதி மங்கலத்து நராக்கண் ஸ்ரீ கிருஷ்ணன் இராமனான சேனாபதிமும்மடி சோழ பிரம்மமாராயன்' என்பது சிலாசாஸனக் குறிப்பு. இராஜ இராஜன் சிம்மாதன மெய்திய பன்னிரண்டாம் ஆண்டு முதல் பதினான்காம் ஆண்டுவரை கங்கபாடி, வெங்கிநாடு, நுளம்பபாடி, தடிகைபாடி, குடமலைநாடு, பன்றிநாடு, முதலிய நாடுகளின்மீது படையெடுத்து வெற்றி பெற்றமையை அவரது சிலா சாதனத்தால் அறியலாம்.

'காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளி, வேங்கை நாடுங,
கங்க பாடியும், குடமலைநாடுங் கொல்லமும் கலிங்கமும்,
முரட்டொழிற் சிக்களர் ஈழ மண்டலமும், இரட்டபாடி
ஏழரை இலககமும், முந்நீர பழந்தீவு பன்னீராயிரமுங்,
திண்டிறல் வென்றி தண்டாற் கொண்டதன்

*　　*　　*　　*　　*

கங்கபாடி என்பது இப்போதிய மைசூர் சமஸ்தானம். இதை எருமை நாடு என்றுங் கூறுவர். கங்கபாடிக்குக் காவிரி நதிக்கரையிலுள்ள தலைக்காடு என்னும் நகரமே தலைநகராக யிருந்தது. இராஜ இராஜன் வெற்றிபெற்ற பிறகு இதற்கு அவருடைய பெயரால் 'இராஜ இராஜபுரம்' என்று பெயரிடப்பட்டது. கங்கபாடி முற்றுகைப் போரில் காநதளூர்ச் சாலையில் வெற்றிபெற்ற அபிமாயன் மீண்டும் போர்செய்தான். அவனுக்கு இராஜ இராஜன் கொத்த மண்டலத்தை மானியமாகக் கொடுத்தான். அதுமுதல் அவனுக்குக் "கொத்தமண்டல நாயகன்' எனப் பெயருண்டாயிற்று. அபிமாயன் போஸலராயரின் மந்திரியான நாகண்ணனைக் களியூரில் வென்று உயிர்துறந்தான்.

அவன் இறந்ததைப்பற்றி இராஜ இராஜனுக் குண்டான வருத்தம் இவ்வள வவ்வளவில்லை.

வேங்கைநாடு அல்லது வேங்கிநாடு என்பது இப்போதிய கிருஷ்ணா கோதவரி ஜில்லாவாகும். இவ் வெங்கிநாட்டில் வெகு காலமளவு உள்நாட்டுக் கலகம் விளைந்திருந்தது. அத் தருணத்தையே நிமித்தமாகக் கொண்டு இராஜ இராஜன் அவ் வெங்கிநாட்டின் மீது படையெடுக்கத் தன் மகன் இராஜேந்திரனை யனுப்பினான். வெங்கிநாட்டை அதுகாலை அரசாண்ட மன்னன் விமலாத்தியன். அவன் போர் திறமைகொண்டவனல்லன். அவ் விமலாதித்யனைப் போரில் வென்று, வெங்கி நாட்டைச் சோழநாட்டுடன் சேர்த்து, அவனையுஞ் சிறைப்படுத்தித் தஞ்சைக்குக் கொண்டுவந்தான். இராஜேந்திரனுடைய போர்திறத்தைக் கண்ட இராஜ இராஜன் தன் மகனை மெச்சி பெருமகிழ்வு கொண்டான். சிறைப்பட்ட விமலாத்தியன் இருபத்துமூன்று வருடகாலம் சிறைக்கூடத்தில் இருக்க உத்திரவு பிறந்தது.

விமலாதித்யன் யௌவனமும் அழகும் பெற்றிருந்தமையால், இராஜ இராஜனுடைய மகளான குந்தவை யாருடைய காதலுக்குப் பாத்திரமானான். அக் காதல் வளர்பிறைபோல் நாளுக்கு நாள் வளர்ந்தது. விமலாதித்யன் பால் குந்தவையாருக்குக் காதல் பெருகி வருவதை யறிந்த இராஜேந்திரன், தகப்பனிடஞ் சென்று விமலாதித்யனை விடுவித்து, அவன் நகரையும் அவனுக்கு மீண்டும் அளித்துத் தன் சகோதரியான குந்தவையாரையும் மணமுடித்து வைத்தான். இராஜ இராஜன் காலத்திலிருந்து தமிழர்களுக்கும் ஆந்திரர்களுக்கும் சம்பந்தம் ஏற்பட்டு அவ்விருவரும் அன்னி

யோன்னியமாக வாழ்ந்துவந்தனர். இராஜ இராஜனுடைய ஆட்சியிலிருந்து மூன்று நூற்றாண்டுவரை ஆந்திரதேசத்தவர்கள் சோழமன்னர்களுடைய ஆதிக்கத்திலிருந்து வந்தனர். பிற்காலத்துச் சோழமன்னர்களின் வீரங் குறையவே, தமிழர்களுடைய தறுகணாண்மையுஞ் சிதறி, சேற்றில் நட்ட கம்பம்போல் பலமின்றிப்போயிற்று. ஆந்திரர்கள் வரவர அறனும் ஆற்றலுங்கொண்டு கலிங்கம், இராஷ்டரகூடம் முதலிய நாடுகளையுங்கொண்டு வாழ்ந்தனர்.

நுளம்பபாடி என்பது கங்கபாடிக்குப் பக்கத்திலுள்ளது. கங்கபாடி, நுளம்பபாடி, பாணவாசி இம்மூன்றுஞ் சேர்ந்ததே கங்கபாடியாக யிருந்தது. சேரன் செங்குட்டுவன் வடநாட்டு யாத்திரை சென்று திரும்பிவருகையில் கங்க வம்சத்தார் அவனை எதிர்கொண் டழைத்து மரியாதை செய்தனுப்பினர். அதற்குப் பிறகே கங்கவம்சத்தாருடைய நாடு மூன்றாகப் பிரிந்தது. நுளம்பபாடி இப்போதிய கோலாரும் அதைச் சுற்றிலுமுள்ள பிராஞ்சிய மாகும். ஐயப்ப நுளம்பன் என்பவன் இந்நாட்டை அரசாண்டிருந்தான். அவன் இராஜஇராஜனால் கி. பி. 998-ம் ஆண்டில் போரில் தோல்வியடைந்தான். நுளம்பபாடியும் சோணாட்டுடன் சேர்க்கப்பட்டது.

குடமலை நாடு என்பது இப்போதிய குடகு தேசம். இக் குடமலை நாடும் இராஜஇராஜனால் தண்டோபாயத்தில் சோணாட்டுடன் சேர்க்கப்பட்டது. குடமலை நாட்டாருடன் பனசோகை என்னுமிடத்தில் இராஜ இராஜனுடைய படைகள் போர் புரிந்து குடமலை நாட்டாரைச் சின்னபின்னப்படுத்தின. அப்போரில் சோணாட்டுப் படைத்தலைவன் பஞ்ச

வன்மாராயன் காண்பித்த வீரத்திற்கு அளவில்லை. அதற்காக இராஜ இராஜன் அப்படைத்தலைவனை வேங்கைமண்டலம், கங்கமண்டலம் இரண்டினையுங் காக்க ஏற்பட்டிருந்த படைகளுக்குத் தலைவனாக நியமித்ததுந் தவிர, க்ஷத்திரியசிகாமணி கோங்களவன் என்னும் வீரப்பட்ட மொன்றையும் தந்தருளினான். தவிர, அவ்வீரனுக்கு மலைவி என்னும் நகரத்தையும் ஜீவிய (ஜாகீர்) மாகக் கொடுத்தான். அஞ்சாது எதிர் நின்று போர்புரிந்து வரும் வீரர்களுக்குப் பட்டமும், இறந்துபட்ட வீரனை மறவாது நினைவுகூர்தற் பொருட்டாக அம்மறவனைப்போலக் கல்லில் உருவமைத்துப் பிரதிஷ்டைசெய்வதும் இராஜ இராஜனின் அருஞ் செயல்களாம். இதல்லாமல் வீரர்களின் வீரத்தையும் அறிவையுமறிந்து அவர்களுக்கு வெற்றிபெற்ற நாடுகளில் நாயகத்துவமும் கொடுத்து உற்சாகத்துடன் இராஜ இராஜன் அவர்களைக் காப்பாற்றி வந்தான். போரில் புண்பட்ட வீரருக்கும் வீரருட் சிறந்தார்க்கு முத்தார முதலியனவுங் கொடுப்பான். பரந்த நாடுகளைக்கொண்டு அரசியல் நடத்தவேண்டுமென்னும் அவா இராஜ இராஜனுக்கு இருந்துவந்த தென்பதைக் கல்வெட்டுச் சாதனங்களில் ‘ திருமகள்போலப் பெருநிலச் செல்வியுந் தனக்கே யுரிமைபூண்டமை மனக்கொள ’ என்றதினால் விளங்கும். பிறகு, இராஜ இராஜன் தன் அரசியல் பதினான்காண்டு முடிவு பெறுவதற்கு முன்னமே, பாண்டிய நாட்டுடன் போர் செய்யப் படை யெடுத்தான். பாண்டிய நாட்டு மன்னன் அமரபுஜங்க பாண்டியனும் படைக்கோலம் பூண்டு வந்தனன். காந்தளூர்ச் சாலையில் தோல்வியடைந்த சேரமன்னன், இராஜ இராஜனை எவ்விதத்

தாலும் தோல்வி யடைவிக்கவேண்டுமென்னு மவா கொண்டு அமரபுஜங்கனுக்கு அமர்களத் துதவத் திரண்ட சேனையையுந் தந்தான். இருதிறத்துச் சேனை யுந் திரண்டுவந்தும் இராஜ இராஜனுடைய சேனைக்கு முன் நிற்கமாட்டாமற் போயின. பாண்டியர்களும் சேரவீரர்களும் சோணுட்டுப் போர்வீரர்களின் முன் நிற்கமுடியாமல் புறங்காட்டி ஓடினர். அப்போரில் இராஜ இராஜனுக்குக் கிடைத்த பொன்னும், மணியும், பொற்பணியும காசும் அளவற்றன. 'உடையார் ஸ்ரீராஜ ராஜதேவர் சேரமானையும் பாண்டியர்களையும மலை நாட்டு எறிந்துகொண்ட பண்டாரங்களில் யாண்டு இருபத்தாறுவது நாள் முன்னூற்று ஒருபத்தொன்பதி னுள் ஸ்ரீராஜ ராஜேஸ்வரருடைய பரமஸ்வாமிக்குக் கொடுத்த பொன்னின் சின்னங்கள் ஆடவல்லான் என்னும் கல்லால் நிறையெடுத்து கல்லில் வெட்டின படி பாண்டியநாடும் பாண்டியநாட்டுப் பொருள்களும் சோணுட்டைச் சேர்ந்தவையாயின'. இங்ஙனம் நான்கு திசைகளிலும் திக்கு விஜயஞ்செய்து வெற்றி முரசங்கொண்டபின் இராஜ இராஜன் அந்நாடுகளைத் திருத்தி யமைக்கத்தக்கத் தலைவர்களை யனுப்பினன். குடிகளுக் கின்னலின்றி அவர்களைக் காத்துவரும்படி இராஜ இராஜன் ஆணை செலுத்திவந்தான். வெற்றி பெற்ற நாடுகளில் மன்னர்களுக்கும் மன்னர் குமாரர் களுக்கும் மற்றுமுள்ள குடி சனங்களுக்கும் முறையே வருத்தமின்றி இராஜ இராஜன் அரசியல் நடத்திவந் தான். பழைய படைகளையும் படை வீரர்களையும் வேளாளரிடத்தும், மறவரிடத்தும் குறும்பரிடத்தும் திரட்டிப் போர்முகத்தனுப்பக் காத்துவந்தான். பிறகு, கி. பி. 1001-ம் ஆண்டில் கோல்லத்தின் மீது படை

யெடுத்து அதைத் தன்னாட்டுடன் இராஜ இராஜன் சேர்த்தான். கொல்லத்தின்மீது படையெடுப்பு முடிந்த தும் கலிங்கத்தின்மீது இராஜ இராஜன் படை யெடுத் தான். கலிங்கமென்பது இப்போதிய கஞ்சம், விசா கப்பட்டணம், ஒரிஸா இவைகளே யாம். இங்ஙனம் கலிங்கம முதல் கொல்லம் வரை சோழ இராஜ்யம் அவன் காலத்துப் பரந்து மகோன்னத நிலையில் இருந் தது. தவிர, இராஜ இராஜன் தன் இருபதாம் ஆண்டு ஆட்சி முறையில் ஈழமண்டலத்தின்மீதும் படை யெடுத்துச் சென்றான். ஈழமண்டலத்தில் (இலங்கை) அப்பொழுது ஒருவருக்கொருவர் போர்புரிந்து எங் கும் சண்டையுஞ் சச்சரவும், கலகமும் குழப்பமு மாகவே யிருந்தது. இராஜ இராஜன் கப்பற்படை கொண்டு நாட்டைக் கைக்கொண்டான். இராஜ இரா ஜன் இலங்கையிலுள்ள ஒரு கோயிலுக்கு ஒரு கிராமத் தை மானியமாகக் கொடுத்ததைப்பற்றிச் சிலா சாத னத்தில் குறிப்பிட்டிருக்கின்றது. இவனுடைய போர் திறம் எண்டிசையும் விளங்கிற்று. அக்காலத்திய போர் அறத்தின்படி மயிர் குலைந்தோன், அடி பிறக் கிட்டோன், கண்ணிழந்தோன், படையிழந்தோன் ஆகிய இவர்களைப் போர்க்களத்தே கொல்லாது விடு தலும், தம் காவல் மரத்தினைத் தாம் அழித்தலும், தமக்குச் சிறந்த வீரமாகக் கருதுதலும், முகத்தினும், மார்பினும் புண்படுதலை அணிகலமாகவும், முதுகிற் புண்படுவதைத் தோல்வியாகவும நினைத்தலும, வலி யறியாது எதிர்க்கும் பகைவரை ஆண்மை யழித்தலு மாகிய வீரச்செயல்களை இராஜ இராஜன் பண்டைக் கால வழக்கப்படி செய்துவந்தான். மீண்டும், கி. பி. 1006–07-ம் ஆண்டில் இராஜ இராஜன் ஏழரை லக்கம்

கொண்ட இரட்டைப்பாடியின்மீது படையெடுத்து அநநாடுகளையுங் கைப்பற்றிக் கொண்டான். இரட்டைப்பாடி ஏழரை இலக்கமும் என்பது பல்லாரி, அநந்தபுரம், கடப்பை, கர்னூல் முதலிய ஜில்லாக்களெனச் சிலர் கூறுவர். மற்றுஞ் சிலர், விந்திய பர்வதத்திற்குத் தெற்கேயுள்ள பம்பாய் மாகாணமும், நிஜாம் இராஜ்யத்தின் பாதிபாகமும், மத்திய மாகாணத்தில் சில பாகமும எனக்கூறுவர். இரட்டைப்பாடி ஏழரை இலக்கமும் என்பது ஏழரை இலட்சம் ஊர்களைக் கொண்ட நாடு இரட்டைப்பாடியாகும். இந்நாட்டைச் சேர்ந்தவர்களுக்கு மேற்குச் சாளுக்கியர்களெனப்படும். இம்மேற்குச் சாளுக்கிய வம்சத்தினர் நல்ல தீரர்கள். அன்னிய அரசாட்சிக்குட்பட்டு அடங்கியிருக்கும் தன்மையற்றவர்கள். அன்னிய ஆதிக்கத்தைத் தாங்காது அடிக்கடி உள்நாட்டில் கலகமும், சோழநாட்டுப் படைகளுக்குத் துன்பமும் இயற்றிவந்தனர். இரட்டைப்பாடியை யாண்டுவந்தவன் இரண்டாவது சத்யாஸ்ரயன். சத்யாஸ்ரயனைத் தலைமை கொண்டு மேற்குச் சாளுக்கியர்கள் சோழநாட்டு எல்லைப்புறத்தில் விடாது கலகம விளைத்து வந்தமையால், சோழநாட்டுக்கோ இராஜகேஸரி வர்மன் இராஜ இராஜன் ஒன்பது இலட்சம படை வீரர்களையும் கடுங்கண் மறவரையும், வாட்படைஞரையுங் கொண்டு நாடு நகரங்களைச் சூறைபாடியும், ஊர்களைக் கொள்ளையடித்தும், கிராமங்களைத் தீமூட்டியும் கொடிய பயத்தை யுண்டாக்கினான். படையெழுச்சியில் எதிர்ப்பட்ட முதிஞர்களையும், புருஷர்களையும், மனைவி மக்களையும் கொன்று எண்ணிறந்த மாதர்களையும் கொணர்ந்தானெனப் பழி சுமத்தப்

பட்டது. சாளுக்கிய வம்சத்தினர் செய்துவந்த அடாத காரியங்களினால் இராஜ இராஜன் கோபங் கொண்டு தகாத காரியங்களைச் செய்திருக்கக்கூடும். என்றாலும், இது சோணாட்டு மன்னர்களின் இயற்கைக்கு மாறுபாடான காரியமாகும். இராஜ இராஜன் போர் கழித்துத் திரும்பிவருகையில் கோயில்களுக்குப் பொன் மலர் தூவினான் எனக் கூறப்படுகிறது. சாளுக்கிய நாட்டில் செய்த அடாத காரியங்களின் சாந்திக்காகவே பொன்மலர் தூவியிருத்தல் வேண்டும். மேற்குச் சாளுக்கியர் சோழ நாட்டார்களின் ஆதிக்கத்தில் வெகுகாலமளவு இல்லை. கி. பி. 1018-ம் ஆண்டில் சோழநாட்டு ஆதிக்கத்தை உதறி எறிந்து, மீண்டும் சுதந்தரர்களாய்ச் சாளுக்கியர் தங்கள் இராச்சியத்தை ஸ்தாபித்தனர். பிறகு, இராஜ இராஜன் தன் இருபத்தொன்பதாம ஆண்டு அரசியலில் தென் கடலிலுள்ள பழந்தீவு பன்னீராயிர (முந்நீர்ப் பழந்தீவு பன்னீராயிரம்) த்தின்மீது படையெடுத்தான். கப்பற் படைகொண்டு அப்பழந் தீவுகளையும் அவைகளின் சுற்றிலுமுள்ள வேறு பல தீவுகளையும் இராஜ இராஜன் சோணாட்டோடு சேர்த்து எண்டிசை விளங்கத் தமிழகத்தை ஒரு குடைகீழ் அரசு செலுத்தி வந்தான். இராஜ இராஜன் யுத்தத்திற்காக யாத்திரை செய்ய நேருமபொழுது குறித்த நல்ல சுப முகூர்த்தத்தில் பரஸ்தானம செய்வதுண்டு. தான் பிரயாணஞ்செய்ய முடியாத காலங்களில், தன் வெற்றி வாளையும் கொற்றக் கொடையையும் களிறுமேலேற்றி மிக்க வைபவத்துடன் கோட்டைக்கு வெளியே பரஸ்தானம் செய்துவைப்பது தமிழ் வேந்தரது பண்டை வழக்கமாகும். இதனை 'நாட்கோள்' என்பர் தொல்

காப்பியனார். பின்பு நன்கு அலங்கரிக்கப்பட்ட அரசு வாவின்மேல் இராஜ இராஜன் ஆரோகணித்துப் பிர யாணமாவான். அங்ஙனம் புறப்படும்போது ஆட வல்லானை, வணங்கிப் பிரசாதம் பெற்றுக்கொண்டு தானதர்மஞ் செய்து, மறையோர் பெரியோர்களை நமஸ்கரித்துச் செல்வது வழக்கமாகும். போரில் இராஜ இராஜன் வெற்றியடைந்த பின்னர், விழுப் புண்பட்டு இறவாதிருந்த வீரர்களையும், வீரவுலகு அடைந்த சூரர்களுடைய மைநதர்களையும் தன் ஆஸ் தானத்தி லழைத்து அவர்களையெல்லாம் பெரிதும் அபிமானித்து உதவுவான். போரிற் பகைவரை வென்று கவர்ந்த பொருள்கள் எத்துணை அருமை யும் பெருமையும் உடையனவாயினும், அவற்றைத் தம் வீரர்களுக்கும், போர்க்களம் பாடும் புலவர்க்கும், மற்ற இரவலர்க்கும் வேண்டிய வேண்டி யாங்கு அளித்து மகிழ்வதும பண்டை அரசர் கொண்ட ஒழுக் கத்தையும் வழுவாது இராஜ இராஜன் மேற்கொண் டொழுகினான். சோணாட்டு யானை குதிரை வீரர் களும் வாட்படை தாங்கிய சேனைகளும தங்கள் வேந் தன் இராஜ இராஜனது வாள்வலியை ஏத்தி ஆர்ப் பரிப்பர். கொடும் பறைகளும், சங்கங்களும் நீண்ட கொம்புகளும், பேரிகைகளும, மயிர்க்கண் முரசங்களும் போர் முகத்தே ஒலித்தன. வேல், வாள், கேடயம் இவற்றைக் கொண்ட மறவர்களும் குறும்பர்களும், யானைவீரர் குதிரைவீரர் முதலிய வேள் தலைவர்களும் இராஜ இராஜனுடைய மறக்களத்தை யலங்கரித்து வந்தனர். நம் அருண்மொழி வர்மன் போன்ற அறி வுந திருவும்பெற்ற அருந்திறலரசர் தமிழகததில் அதிக மிருநதிலர் என்பது வெள்ளிடை மலைபோல சரிதவ

வாராய்ச்சியினல் விளக்கமாகும். பழைய தமிழ் வேந்தருள்ளே சோழன் கரிகால் பெருவளததானும் சேரன் செங்குட்டுவனுந் தவிர, வேறெவரும் இவனுக் கிணை கூறத் தக்கவரல்லர். அவனது உத்தம குணங்களுக்குள்ளே இராஜ இராஜனது தெய்வ பக்தியைத் தலையிற் வைக்துப் பாராட்டுதல் தகும். தெய்வங்களிடத்தும், பெரியோர்களிடத்தும் அவன் வைத்திருந்த பக்தியும் மரியாதையும் சாலவும் புகழத்தக்கது. இராஜ இராஜனுடைய இயற்கைக் குணங்கள் பலவற்றுள்ளே அவனது வீரத் தன்மையே மேம்பட்டு விளங்கியிருந்த தென்பது அவனுடைய வெற்றி வேம்பாடே சான்ருகும. பகைவர்களை யடக்குவதும் நாட்டைப் பெருகச் செய்வதுமே அவன்மேற் கொண்டிருந்த பெருங் கருமமாக இருநதன. ஜீவியகாலத்தின் பெரும் பகுதியைப் போர்புரிவதிலே செலவிட்டவன் இராஜ இராஜன் என்பது வெளியாகும். தமிழரது வீரததில் இராஜ இராஜனுக்கு மதிப்பும் அபிமானமும் அதிகமாகவே யிருநதன. அவனது பெரும்புகழ் தமிழகத்தில் மட்டுமன்றி, எண்டிசையும பரவியிருந்தது. இராஜ இராஜன் வீரமிகுதியோடு மதிநுட்பமிக்கவனுகவும் இருநதான். அவன் அறிஞர் பலரை யடுத்தும், அவர்களுடன் அளவளாவியும அறியவேண்டுவன வற்றை நன்கறிந்தவன். சிவனடியார்க ளிடமும் ஓதுவார்களிடமும் அவன் வைத்திருந்த மதிப்பும அன்பும் அதிசயக்கத் தக்கவை. அவனது செங்கோற் பெருமையும மதிக்கத் தக்கதே. அவன் தன்னுட்டுக் குடிகளைப் பெரிதும போற்றி ஆட்சிபுரிவதற் பெரு நோக்குடையவன். குடிகளும் அங்ஙனமே அவன்பாற் பேரன்பு பூண்டிருந்தனர். அவன் சநாதன தர்மங்

களைத் தன்னாட்டில் மட்டுமன்றித் தான் வெற்றிபெற்ற விடங்களிலும் ஆதரித்துக் காத்துவந்தவன். 'செங் கோல் வளையுமாயின் அரசர் உயிர்வாழார்' என்னும் முன்னோருரைத்த மொழியி னுண்மையை யறிந்து இராஜ இராஜன் தென்னா டாண்டான். அரசன் தண்டயாத்திரை புறப்படுமுன்னர்த் தன் படைத் தலைவர்க்கும சேனைகட்கும் பெருவிருந்து செய்து அவர்களை மகிழ்விப்பதும் வழக்கமாம். அவன், இளம் பிராயத்தவன் எனினும, சமயத்திற்கேற்ற சாதுரிய புத்தியும, நடுநிலை தவறாமையும, தீரவழக்கையும தீர்க்க வல்ல பேரறிவு முடையவனாக விளங்கினான். அவன் யாரிடத்தும் இன் மொழியையே நன்மொழியாகக் கொண்டிருந்தான்; கடிநதுபேசும் குணத்தையுடையவ னல்லன். அவன் பெரியோரிடத்தும சிறியோரிடத் தும் சமதிருஷ்டிகொண்டு அரசியல் நடத்திவநதான். அவன் உண்மையும் நன்மையுங்கொண்டு இரவு பக லின்றி தானதருமஞ் செய்து, ஒப்பற்ற சார்வ பௌம னாய்த் தமிழகததில் விளங்கினான்.

# VII

## இராஜ இராஜனின் இல்லறச் செயல்கள்.

இராஜ இராஜன் சேரநாட்டு மன்னனையும் பாண்டிநாட்டு மன்னனையும் போரில் வென்று அந்நாடுகளைச் சோழநாட்டுடன் சேர்த்து ஆட்சி புரிந்ததினால், இவனுக்கு இராஜ ராஜகேசரிவர்மன் மும் முடிச் சோழன்' எனப் பெயருண்டாயிற்று. தமிழ கத்திலுள்ள முடியுடைய மன்னர் மூவருள் சோழ மன்னனே சிறப்புற் றிருந்தமையால் அவ்விருவர் முடி யும் இவ்வொருவரையே யடைந்தது பற்றிக் குடிகள் தாம்கொண்ட நன்றிக்கு அறிகுறியாக அவனை மும் முடிச் சோழன் என்று அழைப்பாராயினர். குறுநில மன்னர் பலரையும் சிற்றரசர் சிலரையும் வென்று பல தேசமன்னர்கள் கப்பங்கட்டிக் காத்திருந்தமையால் திருவிற் சிறந்த இராஜ இராஜனை 'இராஜ ஸ்ரேயன்' என உலகம் கூறுவதாயிற்று. இப்பட்டம் அவனுடைய ஆட்சியின் இருபதாம் ஆண்டில் அளிக்கப்பட்ட தென் பதை 'திருவல்லம் சிலாசாதனம்' குறிக்கும். வேலும் வாளுங் கொண்ட வடிவினையுடைய இராஜ இராஜன் உயர்ந்த வெண் கொற்றக்குடை நிலைபெறக் கடலெல் லைக் கண்நிலத்தைப் பரப்பி எண்டிசையிலும் வெற்றிக் கொடியை நாட்டின ஆண்மைக்குக் குடிகள் மகிழ்ந்து 'ஜயங்கொண்ட சோழன்' எனப் புகழ்ப்பட்டமுங் கொடுத்தனர். சோழநாட்டிலும் சோழநாட்டைச் சுற் றிலுமுள்ள மற்ற நாட்டிலும் கோயில்கள் கட்டியும்

திருப்பணி கைங்கர்யங்கள் செய்தும் சிவபக்தி மேலிட்டு விளங்கினமையால், இராஜ இராஜனுக்குச் சிவனடியார்களும் மற்ற திருக்கூட்டத்தார்களும் 'சிவ பாத சேகரன்' என்னும் புனிதநாமத்தை யீந்தனர்.

இராஜ இராஜனுக்கு அருள்மொழி வர்மன், கோராஜகேசரி வர்மன், தென்ன பராக்கிரமன், கீர்த்தி பராக்கிரம சோழன், க்ஷத்திரிய சிகாமணி, கோளாந் தகன், சிவபாத ஹிருதயன், மும்முடி சோழன், இரா ஜஸ்ரேயன், ஜயங்கொண்ட சோழன், சிவபாத சேகரன் எனப் புகழ் நாமங்கள் பல உண்டு. அவன் சிவபெருமான் திருவருள் பெற்ற சுத்த சைவ சம யத்தவன். அவன் போர்க் கோலங்கொண்டு செல் லும்போதும் யாத்திரை புறப்படும்போதும் சிவபெரு மானையும் சிவனடியார்களையுந் தரிசித்து, ஆடவல்லான் திருவடி நிலைகளைத் தரித்துப் பிரசாதத்தை வாங்கி வருவது வழக்கம். சிவபிரான் பால் அவனுக்கிருந்த பக்தி மிகுதி விளங்கத் தக்கது. சோழர்கள் பொது வாகக் கோயில்களைக் கட்டுவதிலும், மண்டபங்களை யமைப்பதிலும் சத்திரங்கள் மடங்கள் சாலைகள் எடுப் பிப்பதிலும் மிக்க பேர்பெற்றவர்கள். சோழமன்னர்கள் பரம்பரையாகவே திருப்பணி வேலையி லீடுபட்டவர் கள். இராஜ இராஜன் தஞ்சையில் பிரகதேஸ்வரருக் குப் பெரிய கோயிலைக் கட்டினான். இக்கோயிலுக்கு 'இராஜ இராஜேஸ்வரர் கோயில்' எனப் பெயரு முண்டு. இக்கோயில் வெகு அழகாயும் உயர்வாயும் இருக்கும். தென் இந்தியாவில் இப்பொழுதுள்ள புராதன கட்டடங்களில் இது மிகவும் விசேஷமானது. புராதனத் தோற்றங்களைப் பார்க்கவரும் தற்காலத்த வர்களுக்கு இது சிறந்த கண் காட்சியாக யிருக்கின்

றது. இராஜ இராஜனுடைய * பெருந்தரம் பிரம்ம மாராயன், மேல் பார்வையினால் விசேஷதனம் செல வழிக்கப்பட்டு கட்டப்பட்டது. ஸ்ரீராஜ ராஜ தேவர் திருவாய் மொழிந்தருள இத்திருச் சுற்று மாளிகை எடுப்பித்தான். சேனுபதி சோழமண்டலதது உய் யக்கொண்டான் வளநாட்டு வெண்ணுட்டு அமண் குடியான கேரளாந்தகச் சதுர்வேதி மங்கலத்து ஸ்ரீ கிருஷ்ணன் ராமனுன மும்முடிச் சோழ பிரம்ம மாரா யன். இக்கோயில் சுவற்றுகளில் வெட்டப்பட்ட சிலா சாதனங்களின் மூலமாகவே பெரும்பாலும் இராஜ இராஜனின் சரிதம் அறியப்படுகிறது. இக்கோயி லுக்கு இராஜ இராஜன் கொடுத்த மானியங்களும் ஆடவல்லான் ஸ்வாமிக்குக் கொடுத்த பொன்னும் மணியும் பொற்பணியும், இராஜ இராஜன் கோப்பெருந் தேவியும் சுற்றத்தாருங் கொடுத்த பொன்னும் மணி யும் அபரிமிதமானவை.

வட ஆற்காடு ஜில்லாவில் மேல்பாடி என்னும் ஊரில் ஒரு கோயிலையும் இராஜ இராஜன் கட்டினன் அக்கோயிலுக்கு சோளேஸ்வரர் ஆலயம என்றுபெயர். தஞ்சைமா நகருக்கு ஏழுமைல் தூரத்தில் உத்தர கைலாயம என்னும நாமததால் விளங்கும் திருவை யாறு க்ஷேத்திரததில் இராஜ இராஜனுடைய கோப் பெருந்தேவியார் திருலோக மகாதேவி ஓர் ஆலயப் பிரதிஷ்டை செய்தார். அக்கோயிலுக்கு லோக மகாதேஸ்வரர் ஆலயம் என்று பெயர். அவன் புற மதங்களில் வெறுப்புக் காட்டுதலின்றித் தன் காலத்து

---

* பெருந்தரம் என்பது அரசனின் காரியஸ்தன் பதவி இக்கோர் உத்தியோகம்.

வழங்கிய எல்லாச் சமயங்களிலும் அன்புவைத்து ஆதரித்து வந்தான். அவன் ஆட்சி காலததில் சைவரும் லிங்காயத்தவரும் வைணவரும், சைனரும் கலந்து வாழ்நது வநதனர். அவன் தன் வைதிக சார்புக்கேற்ப, பெரியோர்களைப் பெரிதும் ஆதரிநது, அவர்கள் கூறும் உறுதி மொழிப்படியே ஒழுகிவநதவனென்பது அவனுடைய சிலா சாதனங்களே விளக்கும். இராஜ இராஜனுடைய காலததிலே வெட்டப்பட்ட சிலா சாதனங்களில் லிங்காயதர்களைப்பற்றிய குறிப்பு யிருப்பதினால், இராஜ இராஜனுடைய காலத்திற்குப் பிறகு பஸவனென்பவரால் சிததாநதப்படுததப் பட்டதென்பது ஒரு தலையாகும். ஏற்கனவே யிருநத லிங்காயதது சித்தாநதத்தை மீண்டும பஸவன் உத்தாரணஞ் செய்திருக்க வேண்டுமென்பதாம. சிவன் கோயில்களுக்குக் கொடுத்தபடியே மற்றவைணவ, புததசைன கோயில்களுச்கும் மானியங்களும பொன்னும் மணியும அவன் கொடுத்தான். வைணவமதம் இராஜ இராஜனுக்குப் பிறகு வநத ஒன்றிரண்டு சோழ மன்னர்களால் கண்டனஞ செய்யப்பட்டபோதிலும், இராஜ இராஜன் காலத்தில் சைவர்களும் வைணவர்களும ஒருவருக்கொருவர் அன்னியோன்னியமாகவே யிருநதனர். வைணவ மதம் சைவதத்தைப் போலவே சோழநாட்டில் சோழமன்னர்களிற் சிலர் வைணவ சம்பிரதாயத்தை மேற்கொண்டனர் என்பதாகவுத் தெரிய வருகிறது. தவிர, நாகப்பட்டினம் தாலுக்காவிலுள்ள ஆனைமங்கலம் என்னுங் கிராமத்திலிருநத புத்தர் கோயிலுக்குப் பொன்னும் பணியுங் கொடுத்ததாகவும், நாகப்பட்டினத்திலுள்ள புத்தர் கோயிலொன்றுக்கு ஆனைமங்கலம் கிராமத்தையே மானியமாக

இராஜ இராஜன் கொடுத்ததாகவுந் தெரியவருகிறது. தஞ்சையிலுள்ள இராஜ இராஜேஸ்வரர் கோயிலில் அநேக புத்தவிக்கிரங்களையும் சிலைகளையும் மண்டபத் தூண்களிலும் விமானங்களிலும் அமைக்கும்படி கட்டளையிட்டான். நாகப்பட்டினத்தில் ஒரு புத்த பள்ளியைத் தன் பெயரால் கட்டும்படியும் அவன் உத்திர விட்டான். ஆரியமக்கள் தமிழகத்திலே குடியேறின பிறகு பழைய தமிழ்மக்களோடு அவர் வேறு தாம் வேறு என்றறியாவண்ணம் கலந்துவந்தனர். அதனால் ஆரியமக்களின் நால்வகை வர்ணக்கிரமங்களும் அனுஷ்டிக்கப்பட்டு வந்தன. பின்னர், வரவர வேறு பல சாதிக்கிரமங்களும உண்டாயின. வேளாளர், கைவினையாளர், கொல்லர், தச்சர், சிற்பர் முதலானோர் முறையே யுண்டாயினர். இக்காலத்தேபோல் அந்நாளில் எண்ணிறந்த ஜாதி பேதங்கள் இருந்தில, அக்காலத்தவருள்ளும உயர்ந்தோர் தாழ்ந்தோர் என்னும் பேதமிருந்ததுண்மையே யெனினும் அவ்வுயர்வு தாழ்வு தற்காலத்தேபோல் அத்துணை கடுமையாயிருந்தது மன்று. அந்நாளில் உயர்ந்தோர் எனக் கருதப்பட்டவர் நால்வர். அவராவார் அந்தணர், அரசர், வாணிகர், வேளாளர் அக்காலத்தில் நல்ல மதிப்பு கொண்டிருந்தனர். வேளாளர், உழுதுண்போர், உழுவித்துண்போர் என்று இருவகையினர். அவருள் உழுவித்துண்போர் மண்டிலமாக்களுந் தண்டத்தலைவருமாய்ச் சோழநாட்டுப் பிடவூரும், அழுந்தூரும், நாங்கூறும், நாவூரும், ஆலஞ்சேரியும், பெருஞ்சிக்கலும், வல்லமும், கிழாரும்முதலிய பதியிற்றோன்றி வேளெனவும் அரசெனவும் உரிமை யெய்தினோரும், பாண்டிய நாட்டுக் காவிதிப்பட்ட மெய்தினோரும் குறுமுடி

குடிப்பிறந்தோர் முதலியோருமாய் முடியுடை வேந் தர்க்கு மகட்கொடைக்கு உரிய வேளாளராம். வேளா ளருட் பலர் அக்காலத் தரசரால் தண்டத்தலைவராக நியமனம் பெற்று அரசரால் படைக்கலமும், கண்ணி யும் கொடுக்கப்பெற்றுப் பகைவர் மேலும் நாடு காத் தல், சந்து செய்வித்தல் முதலிய தொழில்கள் மேலும் சேனைத்தலைவராய்ச்சென்று பொருள் சம்பாதித்தனர். மற்ற வகையினர் தொழில் முறையால் தனிதனி வீதிகளிலே வசித்துவந்தனர். சோழ மன்னர்களிடம் கைவினையாளர் பெரும் புகழ்பெற்றுவந்தனர். கொல்ல ரும், சிற்பரும், தச்சரும், தட்டாரும் இராஜ இராஜ னிடம் அவர்கள் சிறப்புற்றுப் பரிசில் பெற்றுவநதனர். இராஜ இராஜனுடைய காலத்தில் சைவமதம் சிறப் புற்று வநதமைபற்றி புத்த சைனமதங்கள் கொஞசங் கொஞ்சமாக க்ஷீணகதியடைய வாரமபித்தன. பல்லவ வமிசத்தவர்களும பாண்டிய வமிசத்தவர்களும் புத்த சமயத்தவர்களாக ஒருகாலத்தி லிருந்தபோதிலும் அநேகமாக ஏழாம் நூற்றுண்டுக்குப் பிறகு அவர்கள் சைவர்களாகவும் வைணவர்களாகவும் மாறினர். இராஜ இராஜனுடைய ஆட்சிகாலத்தில் புத்த சைனமத கண்டனம் அவ்வளவு பிரபலமாகக் காணப்படவில்லை யாயினும் கி. பி. எட்டாம் நூற்றுண்டிலிருந்தே சைவ சமயா சாரியர்களும் வைணவ ஆசாரியர்களிற் சிலரும் புத்தசைன மத கண்டனங்களை நடத்திவந்தனர். இராஜ இராஜனுடைய காலத்திற்கு முந்தியே தேவார மும் திருவாசகமும் ஏற்பட்டன. இராஜ இராஜன் காலத்தில் தேவார திருவாசகங்கள் எங்கும் ஓதப் பட்டன அரண்மனைகளிலும், கிராம வீடுகளிலும் தேவாரம் ஒலித்துவந்தது. சைவ சமயத்தைச்சார்ந்த

கோயில்களில் தேவார திருவாசகங்கள் பாடத் திருக் கூட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. தேவாரம் ஓதுவார் களுக்கு மானியங்களும் விசேஷ மரியாதைகளும் இராஜ இராஜனுற் கொடுக்கப்பட்டன. அறுவகை உட்சமயங்களில் காளாமுகம், பாசுபதம் ஆகிய இவ் விரண்டும் இராஜ இராஜன்காலத்தில் பரவ வாரம் பித்தன. இரண்டாவது ஆதித்ய கரிகாலன்காலத்தில் பூர்வ மீமாம்ஸ சூத்திரத்திற்கு வியாக்கியானம் பிரபா கரம் என்பதைக் கூறின பிராம்மணர்களுக்கு நிலங்கள் விடப்பட்டிருந்தனவென்றும், அக்காலத்திலிருந்து பிர பாகர மதம் என்பதாக ஒரு மதம் ஏற்பட்டதென்றும் தெரியவருகிறது. இது 8-வது நூற்றுண்டில் இருந்த தாகத் தெரியவந்ததன்றி 10-ம் நூற்றுண்டில் இருந்த தாகத் தெரியவில்லை. ஆனால், இராஜ இராஜன் காலத் தில் மார்கழிமாதத்தில் வரும் திருவாதரை உற்சவத் திற்கு முன்னிரவில் காமரஸவல்லி கோயிலில் தளவாகர சாமவேதம பாராயணஞ் செய்யப்பட்டு வநததாகவும், பாராயணஞ் செய்பவர் ஒவ்வொருவருக்கும் அன்ன மளித்து $1\frac{1}{4}$-கழிஞ்சு பொன் தட்சிணையும கொடுக்கப் பட்டதெனவுந் தெரியவருகிறது வைணவர் கோயில் களில் நமமாழ்வார் அருளிய தமிழ்ப் பிரபந்தங்கள் சொல்லப்பட்டன. இராஜ இராஜன் ஆட்சியில் தமி ழகத்தில் எங்கும் பிள்ளையார் கோயில்களும் சிவன் கோயில்களுமகட்டப்பட்டன. நவக்கிரக பிரதிஷ்டை கள் விசேஷமாகவும செய்யப்பட்டன. அவன் காலத் தில் ஹனுமபூஜையும் செய்யப்பட்டு வநதெதன சிலா சாதன வாராய்ச்சியாற் றெரியவரும். அரிஞ்சய சோழன்காலத்திலிருந்து ஸ்ரீகிருஷ்ண ருக்மணி பூஜை யும் நடநதுவந்ததாகத் தெரியவருகிறது. இராஜ

இராஜனுடைய கோயில் பிரதிஷ்டைகளும் தேவார திருவாசகப் பாடல்களின் ஏற்பாடுமே புத்த சைன மதங்களின் க்ஷீணகதிக்குக் காரணமாக யிருந்தன.

இராஜ இராஜனுடைய காலத்தில் கல்வி மேம்பட்டிருந்தது. கல்விக்கழகங்கள் பல எங்கும் ஏற்படுத்தப் பட்டிருநதன. சங்கநூல்களைப்போல நூல்கள் இவன் காலத்தில் ஏற்படாமற்போனபோதிலும் சங்கப்புலவர் களைபபோலப் புலவர் பெருமான்கள் பலர் இவன் காலத்தில் இல்லாமற்போனபோதிலும், சங்கநூல் களும சங்கப்புலவர்களும் வெகு சிறப்பாகக் கொண் டாடபபட்டு வந்தன. திருவிசைப்பா இயற்றிய காந்தராதித்ய தேவரும் அப்பர், சுந்தரர், சம்பநதர் அருளிய தேவாரங்களையும், மாணிக்கவாசகர் திருவாச கத்தையும் திருமுறைகளாக வகுத்து பண்படுத்தி இயற்றிய நம்பியாண்டார் நம்பிகளும் இராஜ இராஜன் காலதநிருந்தவர். ஸ்ரீ வைஷ்ணவ சமயாசாரியர்களில் ஒருவரான ஸ்ரீ யமுனாசாரிய ரென்னும் ஆளவந்தார் இராஜராஜன் காலத்தவர். அவர் இயற்றிய 'ஸித்தி த்ரயம' என்னும் விசிஷ்டாத்வைத வேதாநத நூலில் 'பரப்பிரம்மம ஒன்றே' என்பதற்கு உதாரணம் கூறு மிடத்தில் 'சோழராஜனே சம்ராட்' (சோள நருப ஏரவ ஸம்ராட்) என்று கூறி யிருத்தலால் அது இராஜ ராஜ சோழனையே குறிக்கிறது. நிற்க, ஸ்ரீமந் நாத முனிகளும் இராஜ ராஜன் காலத்தவரெனச் சில சரித் திரக்காரர்கள் கூறுகின்றனர். தொல்காப்பியம், பவ ணந்தமுனி நன்னூல் முதலிய இலக்கண நூல்கள் விசேஷமாகக் கையாளப்பட்டு வந்தன. இராஜ இராஜ னைத் திருமுறைகண்ட சோழன் என்றும் இராஜ இராஜ அபய குலசேகர னென்றும் கூறுவர். தேவாரம்

திருவாசகம், திருவிசைப்பா ஆகிய இம் மூன்றையும் முறைப்படி இராஜ இராஜன் ஓதிவந்தமையால் இவனுக்குத் திருமுறை கண்ட சோழன் எனச் சிவநேசர்கள் காரணப்பெயரிட்டனர் என்பார்.

ஸ்வஸ்தி ஸ்ரீ: உடையார் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வர உடையார்க்கு ஸ்ரீகார்யம் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூரியனான தென்னவன் மூவேந்த வேளான் ஸ்ரீ ராஜ ராஜீஸ்வரம் உடையார் கோயிலில் யாண்டு இருபத்தொன்பதாவது வரை எழுந்தருளுவித்த செப்பு பிரதிமங்கள் உடையார் கோயிலில் முழக்கோல் அளந்தும் ரத்னங்கள் சாடு நீங்கி தட்சிண மேரு விடங்கன் என்னுங்கல்லால் நிறை எடுத்தும் பொன் ஆடவல்லான் என்னுங் கல்லால் நிறை எடுத்தும் கல்லில் வெட்டினபடி பாதாதி கேசாந்தம் பதினெழுவிரல் இரண்டு* தோரை உயரமும் இரண்டு திருக்கையும உடையராகக் கனமாக எழுந்தருளுவித்த நம்பி ஆரூரனார் பிரதிமம் ஒன்று—

*　　*　　*　　*

பதினாறுவிரல் நீளத்து இரண்டு திருக்கையுடையராகக் கனமாக எழுந்தருளுவித்த நங்கை பரவையார் பிரதிமம் ஒன்று—

*　　*　　*　　*

பாதாதிகேசாந்தம் இருபத்து இருவிரல் இரண்டு தோரை உயரதது இரண்டு திருக்கையுடையாராகக் கனமாக எழுநதருளுவித்த திருநாவுக்கரையர் பிரதிமம் ஒன்று—

*　　*　　*　　*

சாந்தம் இருபத்திருவிரல் இரண்டுதோரை உய

* ஒருமுழம் இரண்டுசாண், ஒருசாண் 12 விரல், ஒரு விரல் 16 தோரை எனப்படும்.

ரத்து இரண்டு திருக்கையுடையாராகக் கனமாக எழுந்தருளுவித்த திருஞான சம்பந்தடிகள் பிரதிமம் ஒன்று—

இராஜ இராஜன் தேவிமார்களும் சுற்றமும் நல்ல தெய்வபக்தி வாய்ந்தவர்களெனத் தெரியவருகிறது. இராஜ இராஜனுக்கு மனைவிமார் அறுவரென விளங்கும். லோக மகாதேவி, பிரீதிமா தேவியார், பஞ்சவன் மகாதேவி, அபிமானவல்லி, சோளமகாதேவி என ஐவர் நாமங்களே தெரியவரும். சேரமன்னனின் மகள் ஒருத்தியையும் இராஜ ராஜன் மணமுடித்தான் எனத் தெரியவருகிறது. இத் தேவியாரின் பெயர் கூத்தன் வீரானியர் எனப்படும்.

லோகமகாதேவியே பட்டமகிஷி. பட்ட மகிஷிகளுக்குக் கோப்பெருந்தேவியார் எனப் பெயருமுண்டு. லோகமகாதேவியை தண்டிசத்தி விடங்கி எனவும் அழைப்பர். இத்தேவி அரசியல் ஞானத்திலும மற்ற வியவகார ஞானத்திலும் சிறந்தவரெனக் கூறப்படுகிறது. இத்தேவி அறிவு, திரு, அழகு, அமைதி முதலிய உயர்குணங்களெல்லாம ஒருங்கு வாய்ந்திருந்ததோடு தன் நாயகனுக்கு உற்றசமயங்களில் உறுதிகூறும் ஆற்றலுடையவராகவும விளங்கினர். தன் கணவன்பொருட்டு இத்தேவி ‘ஹேமகர்ப்பம்’ என்னுஞ் சடங்கு இயற்றிப் பொன்னும் மணியும் விசேஷமாகத் தானஞ் செய்தாள். அரசனது புதல்வன் இராஜேந்திரன்* இவன் காலத்திலேயே யுவ ராஜனுக யிருநதான். இராஜ இராஜனுக்கு ஒரே

* இவனே முதலாவது இராஜேந்திரன். இவனுக்குக் கங்கைக்கொண்ட சோழன் எனற பெயருமுண்டு. இராஜ இராஜனைக் காட்டிலும் இவன் மிக்க வல்லமை பெற்றவன்.

மகனும் இரண்டு மகளும் இருந்தனர். குந்தவையார், மாதேவடிகள் என்னும் இருபெண் மணிகளின் பெயர் களே தெரியவரும். குந்தவையார் கிழக்குச் சாளுக் கிய மன்னனுன விமலாதித்யனை மணந்து பட்ட மகிஷியானுள். அரசனது பிறந்த நாளானது நகரத் தாரால் ஆண்டுதோறும் ஒரு புண்ணியதினமாகக் கரு திக் கொண்டாடப்படும். இதை இராஜ ராஜ தேவர் திருநாள் என்பர். இது பிரதி ஆவணிமாதத்திலும் சதயநட்சத்திரத்திலிருநது 7-நாள்வரை கொண்டா டப்படும்.

விசேடநாட்களிலே, அரசன் ஒரு தட்டிற் பொன் னும், ஒருதட்டிற் ருனுமாகத் துலையிலேறித் தன்னை நிறுத்து அநநிறுத்த பொன்னை மறையவர்க்குத் தானஞ் செய்வான். இதற்கு 'துலாபாரதானம்' என் பர். இது தமிழ்நாட்டாருக்குள் நடைபெற்றுவந்த வழக்கமென்பது யாவரும் நன்கறிந்தது. இராஜஇரா ஜன் பகைவர்நாட்டு மகளிரைச் சிறைகொண்டு, அவர் களின் கற்பும் மானமும் சிதைவுருமல் பாதுகாதது வநதனன். இவன் காலைப்பொழுதில எதுவும அருந் தாது சிவபூசை முடித்துச சிவனடியார்களுக்கு அறு சுவை உண்டிகளைப் படைத்துப் பிறகு உண்பது வழக்கம். பூசையின்றி ஒருநாளும் இவன் இரான். பூசையில்லாக் காலத்து இவன் உண்ணு நோன்பு கொண்டு, பிறகு பூசைமுடித்து உண்பதையே மேலான விரதமாகக் கொண்டிருநதான். இவனுடைய கோப்பெருநதேவியும் மற்ற மனைவிகளும் பெண்டிர் பலருக்குப் பலவித தானங்களையுஞ் செய்து வந்தனர். இவன் இல்லற வாழ்க்கையை இனிது நடாத்திப் பெரும்புகழ் பெற்று வநதான்.

VII

## இராஜ இராஜனின் நகரமும் நாகரிகமும்.

சோழமன்னர்களுக்குக் கருவூர், உறையூர், காவிரிப்பூம்பட்டினம், தஞ்சை, திருவாரூர், காஞ்சி முதலியவை இராஜதானிகளாகக் கூறப்பட்டிருப்பினும் இராஜ இராஜன் நெடுங்காலம் தஞ்சைக்கண்ணே அரசு புரிந்துவந்தான். தஞ்சைமாநகர் ஆறுவது ஏழாவது நூற்றாண்டுகளில் பல்லவ வம்சத்தாருக்குச் சொந்தமா யிருந்தது. முதலாவது பராந்தகனின் இரண்டாவது புதல்வனான கந்தராதித்யன் கி. பி. 956-ம் ஆண்டில் தஞ்சையைக் கைப்பற்றினமையால் அவனுக்குத் 'தஞ்சையர்க்கோன்' எனப் பெயருண்டாயிற்று. அந்நாள்முதல் இராஜ இராஜன் நாள்வரை சோழமன்னர்களுக்குத் தஞ்சையே தலைநகராக யிருந்து வந்தது. இத் தலைநகரின் கோட்டைக்கு வெளியே பொழில்களும் பொய்கைகளும், பிள்ளையார் கோயில்களும், வழிப்போக்கர் சாலைகளும், மடங்களும், புத்தர் பள்ளிகளும் இருந்தன. அப்பொழில்களிலும் பொய்கைக் கரைகளிலும் சாஸ்திர அறிஞரும் ஞானிகளும் எங்கும் நிறைந்திருந்தனர். கோட்டையைச் சூழ்ந்துள்ள புறஞ்சேரியில் அரண் காவல்புரியும் படையிருப்புக்களும் அன்னிய அரசர்கள் தங்குதற்கமைந்த மாளிகைகளும் இருந்தன. கோட்டையை ஆழ்ந்தகன்ற அகழி சூழ்ந்திருந்தது. அதனிடை பலவகை முதலைச் சாதிகளும் பெருமீன்

களும் இருந்தன. தாமரையும் ஆம்பலும் அதில் நிறைந்திருந்தன. கோட்டையின் வாயிலைக் கடந்து உள்ளே செல்லின், கோட்டை வாயில்காக்கும் காவலாளர் வசிக்கும் வீதிகளும் கைவினைஞர் வீதிகளும், கூலவகை விற்போர் வீதிகளும், பொதுமகளிர் தெருக்களும், வாணிகர் வீதிகளும், வியாபாரிகள் வீதிகளும், அங்காடி வீதிகளும், அந்தணரிருக்கையும், இராசவீதியும், பல்வகை அதிகாரிகள் வாழுந் தெருக்களும் அத் தலைநகரில் முறையே அமைந்திருந்தன. இவையன்றி யாவரும் வந்து தங்குதற்குரிய சத்திரஞ் சாவடிகளும் அழகிய அம்பலமும் பொய்கைகளும் மடங்களும் பொது மண்டபங்களும் விளங்கின. இராஜனுடைய அரண்மனையானது அந்நகரின் மந்தியில் பொன்மயமானதொரு குன்றதனைப்போலப் பிரகாசித்திருந்தது. அதனுள் அத்தாணி மண்டபமும் மந்திராலோசனை சபையும், நடனசாலையும், தேவார சிற்சபையும், பிறவும் மாட்சிமை பெற்று விளங்கின. வசந்த காலத்தில் அரசன் வாழ்வதற்கேற்ற உத்தியான வனமும் சிறு மாளிகையும் அதைச்சுற்றி வாய்க்கால்களும் வெட்டப்பட்டு இருந்தன. அரண்மனையைச் சுற்றி யானைக் கொட்டாரங்களும் குதிரைச் சாலைகளும் பசுக் கொட்டில்களும், ஆயுதச் சாலைகளும் இருந்தன. அரசனுக்கென்று ஒரு தனிக் கோயிலும் * உண்டு. தஞ்சைக் கண்ணே பல சிவன் கோயில்களும் இருந்தன. தஞ்சைமா நகரின் சிறப்பு குன்றின்மேலிட்ட விளக்கு போல் பிரகாசித்திருந்தது. தஞ்சை திரு நடனமாடின நகர்போல் பொலிவுற்றிருந்தது. தஞ்சையில் காந்தர்வதெரு, ரௌத்ரமஹாகாளத்து மட

* கோ-அரசன் இல்-வீடு=கோயில்=அரசன் அரண்மனை.

விளாகம், இராஜ இராஜத் தெரிந்த பாண்டித் திரு மஞ்சனத்தார் வெளம், உத்தமசீலியார் வெளம், ஆணைக்கடுவார்த்தெரு, ஆணையாட்கள்தெரு, பன்மையார் தெரு, வீரசோழ பெருந்தெரு, இராஜ விஸ்தீரப் பெருந்தெரு முதலிய பலவீதிகள் இராஜ இராஜன் காலத்திருந்தன. சோழ இராச்சியம் இராஜ இராஜன் காலத்தில் மண்டலங்களாகவும் நாடுகளாகவும் கூற்றங்களாகவும் கோட்டங்களாகவும் தனி ஊர்களாகவும் வகுக்கப்பட்டிருந்தது. சோழ இராச்சியம் இராஜ இராஜனால் ஆறு மண்டலங்களாகப் பிரிக்கப்பட்டது. (1) தொண்டமண்டலம் அல்லது ஜயங்கொண்ட சோழமண்டலம்—இது பல்லவ வமிசத்தாரது; தென் பெண்ணைக்கும் வட பெண்ணைக்கும் இடையே யுள்ளது. (2) சோழமண்டலம்—இது தலைநகரைச் சேர்ந்தது; தஞ்சையும் திருச்சிராப்பள்ளியுமே யாகும். (3) இராஜ இராஜ மண்டலம்—இது பாண்டிய தேசம்; மதுரையும் திருவாங்கூருமாகும். (4) அதிராஜ ராஜமண்டலம்—இதற்குப் பண்டையில் சோழ கேரள மண்டலம் என்று பெயர்; சேலமும் கோயமுத்தூருமாகும். (5) கங்கைகொண்ட சோழமண்டலம்—இது கங்க வமிசத்தாருடையது; மைசூரும் பெங்களூருமாகும். (6) நிக்கரிலி சோழமண்டலம்—இது மைசூரின் கீழ்ப்பாகம். வைதும்பதேசம், கோலார், வட ஆற்காடு, கடப்பை முதலிய நாடுகளாகும். வெங்கிநாடு வகுக்கப்படாமல் தனியேயிருந்தது. தவிர, மும்முடி சோழமண்டலமெனவும் உண்டு. இது ஈழம் எனப்படும்.

இம் மண்டலங்களில் தனித்தனியே அரசு நடத்தும் தலைவருண்டு. இராஜ இராஜனின் அரச வம்சத்

தைச் சேர்ந்தவர்களாலும், அல்லது சிறந்த வீரஞ் செறிந்த யுத்தவீரர்களாலும் அம் மண்டலங்கள் பரிபாலிக்கப்பட்டு வந்தன. மேற்கூறிய ஆறுமண்டலங்கள் தவிர வேறு மூன்று மண்டலங்களும் உண்டு என்பதாகச் சிலர் கூறுகின்றனர். அவை:—(1) விக்கிரம சோழமண்டலம்—பெங்களூரின் வடமேற்கு பிராஞ்சியத்தைச் சேர்ந்தது. (2) முடிகொண்ட சோழ மண்டலம்—நுளம்ப பாடியைச் சேர்ந்தது. (3) இரட்டப்பாடி கொண்ட சோழமண்டலம். ஆக ஒன்பது மண்டலங்கள் எனச் சிலர் கூறுவர். மண்டலங்கள் நாடுகளாகவும் வளநாடுகளாகவும் பிரிக்கப்பட்டன மேற்கூறிய ஒன்பது மண்டலங்களி லொன்றான சோழ மண்டலம எண்வகை நாடுகளாகப் பிரிக்கப்பட்டன. அவை—(1) அருள்மொழிதேவ வளநாடு (2) க்ஷத்திரிய சிகாமணி வளநாடு (3) வடகரை இராஜேந்தர சிம்ம வளநாடு (4) நித்தவிநோதினி வளநாடு (5) உய்யக் கொண்டான் வளநாடு (6) கேரளாந்தக வளநாடு (7) பாண்டிய குலாசினி வளநாடு (8) இராஜஸ்ரய வளநாடு எனவாம். மற்ற மண்டலங்களின் வகுப்புத் தெரியவில்லை. இவ்வளநாடு மீண்டும் நாடுகளாகவும் கூற்றங்களாகவும் பிரிக்கப்பட்டது. மேற்கூறிய வளநாடுகளி லொன்றான நித்தவிநோதினி வளநாடு எண்வகைக் கூற்றங்களாகப் பிரிக்கப்பட்டன. அவை:—(1) வெண்ணிகூற்றம் (2) கிழார்கூற்றம் (3) நல்லூர் நாடு (4) கவம்பை நாடு (5) வீர சோழவளநாடு என்பனவாம். இக்கூற்றங்கள் மீண்டும் பலகிராமங்கள் சேர்ந்த ஒரு பகுதியாகவும் அல்லது தனியூராகவும் பிரிக்கப்பட்டன. கிராமங்களுக்கு இராஜ இராஜன் காலத்தில் ஊர், நல்லூர், குடி, பிடகை, சதுர்வேதிமங்கலம், எனப்பல பெயர்

கள் உண்டு. அவைகளுக் கருகே சேரிகளும் குடிமை களும தனித்தனியே யிருந்தன.

குடிகள் அரசனைப்போற்றி இராஜன் எவ்வழி குடிகள் அவ்வழி என இருநதனர். குடிகள் வேளாண் மையையும வாணிகத்தையும் செவ்வனே நடத்திப் பணவருவாயிலைப் பெருக்கிவநதனர். மலைவளங்களும் கடல் வளஙகளும நிலவளங்களும் கொழித்தன. ஆணை வழி நிற்றல், மாண்வினை தொடங்கல், கைக்கடனாற்றல், குற்ற மனததின்மை, சுற்றமபோற்றல், நீங்காத முயற்சி, மன்னிறைதருதல், ஒற்றுமை கோடல், ஒழுக் கம, விருநது புறநதரல் ஆகிய பத்துவகைத தொழில் களையும் உழுதுண்போரும உழுவித துண்போருமாகிய வேளாளர் செய்துவநதனர். கிராமஙகளிலும தனியூர் களிலும குடிகள் அரசனாலும அரசனுடைய பரிசனங் களாலும பயமின்றி வாழ்நதனர். குடிகள் சாநதமும் ஒழுக்கமுங் கொண்டு தெய்வபக்தி பொருநதியிருந தனர். கொலையும், களவும, பொய்யும, வஞ்சனையும் குடிகளிடத்தில் இல்லை. நோயும் துர்மரணமு மின்றிக் குடிகள் ஆண்மக்களாக யிருநதனர். மாதர்கள் மறைந்து வாழ்தல் (கோஷா) என்னும வழக்கமின்றி கற்பிற் சிறநது உரிமையுடன் வாழ்நதுவநதனர். புருடன் மாண்டபின் மனைவி உடனகட்டை யேறுதல் என்னும் வழக்கம் இல்லையாயினும ஆங்காங்கு சிலர்மட்டும அனுஷ்டித்து வநததாகவுந தெரியவருகிறது. கணவற் பிரிந்த மனைவி தீப்பாய்தல் வழக்கமென்பதும் தன் கணவனுடன் தீப்பாய்ந்து ஒழியாக்கால் நெய்யின்றி, சோற்றைக் கீரையுடன் கலநதுணடு, பாயில்லாப் பாய்ந்தரையிலே துயின்று காலங்கழிப்பன் என்பதும் தமிழ்நாட்டு வழக்கமாம். ஸ்திரீகள் புருடர்களுடன்

தாராளமாகத் தெய்வ காரியங்களிலும் உலக வியவ காரங்களிலும் அரசியல் துறைகளிலும் அளவளாவித் தங்கள் அபிப்பிராயங்களைத் தந்துவந்தனர். மாதர்கள் பொற்சிலம்பும் மேகலாபரணமும் வளைகளும் ரத்னத் தோடுகளும் மற்றும சிறந்த பல அணிகளும அணிந்து கொண்டு மின்னற்கொடிபோல் விளங்கினர். மாதர்கள் கிள்ளைவளர்த்தல், அம்மானை யாடல், குரவைக்கூத்து பாணிக்கூத்து முதலியவைகளைக் கொண்டு மகிழ்ந்திருந் தனர். நாடுகளிலும் நகர்ப் புறங்களிலும அடிக்கடி கடாசண்டை எருதுசண்டை ஆடுசண்டை கோழி சண்டைவிடுதல், மல்லயுத்தம், சிலம்பம், வாள்சண்டை, குதிரைப் பந்தயம், யானைபோட்டம் முதலிய விநோத வேடிக்கைகளையுங் கொண்டு குடிகள் உற்சாகத்துடன் வாழ்ந்துவந்தனர். அக்காலத்தில் வறுமையும் பஞ்ச மும மருந்துக்குங் கிடையா.

கிராமங்கள் தோறும் தானியக் களஞ்சியங்கள் ஏராளமாகயிருந்தன. வைக்கோற்கந்து வானளாவி யிருக்கும். தானமும் தருமமும் தங்கியிருந்தமையால் வானம் பொழிந்து இருந்தது. குடிகள் அக்காலத்தில், ஆதுலர்க்குச் சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமயத் தார்க்குண்டி முதலிய முப்பத்திரண் டறங்களையுஞ் செவ்வனே நடத்தி வந்தனர். துறந்தார்க்கும் துவ் வாதவர்களுக்கும் குடிகள் விருந்தோம்பி வந்தனர். சிறியோர் பெரியோர்களிடத்தில் பயமும் மரியாதை யும், பெரியோர்கள் சிறியோர்களிடத்துப் பட்சமும் அன்புங்கொண்டு வந்தனர். கைத்தொழில்கள் பல சிறப்புற்று வந்தன. ஏரிகளுக்கு மதகுகட்டுவதிலும், ஆறுகளுக்கு அணைகட்டுவதிலும், வாராவதி எடுப்பதி லும், உயர்ந்த மண்டபங்களும் கோயில்களும் எடுப்பதி

லும் அக்குடிகள் பேர்போனவர்கள். கல்வெட்டுச் சித்திரங்களிலும் கல்தூண் எழுப்பி அவைகளில் அழகான பதுமைகள் செய்வதிலும் சோழக்குடிகள் மேன்மை பெற்றிருந்தனர். நாட்டையும் நாட்டைப் பற்றிய கருமங்களிலும் அவர்கள் கண்ணுங் கருத்துங் கொண்டு வாழ்ந்து வந்தனர். தேசாபிமானமும மதாபிமானமும் அவர்களுக்குத் தலை தூக்கியிருந்தன. போர் காலங்களில் ஆண்மக்கள் பலர் தாமே படையிற் புகுந்து போர்க்களத்துக்குப் போவர். சாதி வேற்றுமையும் சமய சச்சரவும் இராஜ இராஜன் காலத்தில் கொஞ்சமுமில்லை. குடிகள் தனக்கென வாழாமல் பிறர்க்குரியாளர் எனவெண்ணி அறத்தின் வழி நிற்பர். இவன் காலத்தில் பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் முதலிய நால்வகையாழும், எழுவகை முழவும், வங்கியங்களும் பிறவும் ஆகிய இசைக் கருவிகளைக் குடிகள் பயின்று வந்தனர். நாடகங்கள் சர்வ சாதாரணமாகவே அக்காலத்திருந்தன. குடிகள் ஒருவர்க்கொருவர் அணைத்து ஆதரித்துப் பாங்கு பரிசனையுடன் இன்புற்றிருந்தனர். இங்ஙனம் இராஜ இராஜன் குடிகள் புறநாட்டு ஆதிக்கமின்றி வந்தமையால் அவர்கள் அக்காலத்தில் 'வேந்தனை நிகர்வர்' எனக் கூறப்பட்டு வந்தனர்.

குடிகளுக்குள்ளே விற்பனைக் கிரமங்களும் முறிச்சீட்டு, காப்பிடல் முதலியவைகளுமிருந்தன. சோழர் குடிகளிற் பலர் கடல்வழியாக நாவாய்மீது பல துறைமுகங்கள் சென்று வாணிகஞ்செய்து வந்தனர். மாதர்களுக்குச் சுதந்தரங்கள் பல விருந்தன. பொன்னாற் செய்யப்பட்ட பல ஆபரணங்களை யணிந்து வந்தனர். பொன்னும் வெள்ளியுமே அணிகலன்களுக் குரித்தா

யிருந்தது. படுகண், கள்ளிப்பூ, கொக்குவாய், சவக்கம் இவை இராஜராஜன் காலத்திலிருந்த வைரங்களின் வகை. தூக்கம், திருவாணி, உருட்டு, திருக்கமபி (கடுக்கன்), கண்டத்துடர் (கண்டசரம்), பொட்டு, திருக்கைக்காறை, பாதசாயலம் (பாதகொலுஸு), திருக்கால் மோதிரம இவை இராஜராஜன் காலத்தில் வழங்கின நகைகள். தண்டவாணி என்பது அக்காலதது வழங்கும் உயர்நதபொன். சட்டமுத்து, அணுவட்டம், ஒப்புமுத்து, குருமுத்து, நிம்பொளம், பைட்டம், அம்புமுத்து, காடு, இரட்டை, சப்பதநி, சக்கத்து இவை இராஜ ராஜன் காலத்தில் வழங்கின முத்துக்களின் இனம. அலகலம, குணவியன், கோமளம, நிலகநதி, தளம இவை அக்காலதது வழங்கின மாணிக்கம்.

## VIII

# இராஜ இராஜன் அரசியல்

இராஜ இராஜன் கோல் கோடாது அரசாட்சி புரிந்து வந்தமையால் குடிகள் பலவிடங்களினின்றும் வந்து குடி புகுந்தனர். இவன், காடுகளை வெட்டி நகரங்களாக்கி ஜனங்களைக் குடியேற்றுவித்தான். நீர் நிலைகள் உண்டு பண்ணி நகரங்களிலும் நாடுகளிலும் வளம் பெருக்கினன். முற்கால முறைப்படி இராஜ இராஜனது அரசியலில், அமைச்சர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், ஒற்றர் ஆகிய இவ்வைம் பெருங் குழுவினர் அரசனுக்கு அந்தரங்க ஆலோசனைக்குரியவராகச் சிறந்திருந்தனர். இவர்களன்றி, தேசங்களின் வரிவருவாய்களைக் கவனிக்கும் அதிகாரியான கணக்கியல் வினைஞரும், நாட்டின் சகல அறங்களைப் பாதுகாப்பவரான தருமவினைஞரும், நகர காப்புக்குரிய படைகளின் சம்பந்தமாகத் தலைமை வகிப்போரான தந்திரவினைஞரும், அரசனது காரியங்கட்குரிய காலங்களையும் நிமித்தங்களையும் உள்ளபடி கணித்து உரைப்போரான பெருங்கணிதரும் ஆகிய இவ்வைங்குழுவினரும் அரசனது மந்திராலோசனைக்கு உரியவராவர். சாரணர்களே அரசனுக்குக் கண் போன்றவர்கள். சாரணர்களின் வல்லமையே அரசுக்குப்பலம். சாரணர்களின் திறத்தாலே அரசனின் திறத்தையும் அறிவதுண்டு. இவனுடைய சாரணர்கள் (ஒற்றர்கள்) அன்னிய நாடெங்கும் சஞ்சரித்து,

அந்நாடுகளில் நடக்கும் பல விஷயங்களையும் அடிக்கடி அரசனுக்கு அறிவிப்பர். அவர்கள் எக்காலத்தும் எச்சமயத்தும் தங்கு தடங்கலின்றி அரசனைக் காண லாம். இராஜ இராஜனும் நகரச் செய்திகளை யறிவ தற்பொருட்டு இரவுகளில் மறைவேடம் புனைந்து சஞ் சரித்து வருவானாயினன். இது பண்டைக் காலத்து மன்னர்களின் அன்பையும் வெறுப்பையும், அரச ருடைய பரிஜனங்களால் குடிகளுக் குண்டாகும் நன்மை தீமைகளையும், செங்கோன் முறையைப்பற்றி யும் குடிகள் என்ன கூறுகின்றனரென நேருக்கு நேர் அறிந்து பரிகாரஞ் செய்வதற்கு அரசர்கள் பண்டைக் காலத்தில் இவ்வாறு செய்து வந்தனர். மேற்கூறிய குழுவினர்களன்றிக் கரணத்தியலவர், ஆணை நிறை வேற்றும் அதிகாரிகளான கருமவிதிகள், பண்டாரம் வகிப்போர்களான கனகசுற்றம், அரண்மனைக்காவ லர்களாகிய கடைகாப்பாளர், நகரமக்களால் தெரிந் தெடுக்கப்பெற்ற ஜனப்பிரதிநிதிகளான நகரமாந்தர், படைத்தலைவர், யானைவீரர், குதிரைவீரர் எனப்பட்ட எண்பேராயத்தாரும இராஜ இராஜன் அரசியலில் தலைமை பூண்டிருந்தனர். இவன் தினந்தோறும் அத் தாணி மண்டபத்தே வீற்றிருந்து அரசு செலுத்தி வருவானாயினன். குடிகள் தாராளமாகத் தங்கள் குறைகளை முறையிட்டுக்கொள்ள அத்தாணி மண்ட பத்தே வருவதுண்டு. சிறியோர் பெரியோ ரனைவரும வந்து அவரவர் குறைகளை அரசனிடத்து நேரே கூறுவதற்குத தனியே இராஜ ராஜன் 'செமபியன் மகாதேவிப் பெருமண்டலம்' என ஓர் மண்டபம் கட்டுவித்தான். இராஜ இராஜன் தாம் வேறு குடிகள் வேறு என்றிராமல் அவர்களுடன் நெருங்கிப் பழகி

அவர்களுடைய குறைகளைத் தீர்த்து வந்தான். அக் காலத்தில் குடிகள் இராஜனைக் காண்பது மிகவும் சுல பம். அரசனும் குடிகளிடத்துப் பேசுவது சர்வசாதா ரணம். அக்காலத்தில் அரசாங்கம் தன்னரசாக (சுயேச்சாதிபத்யம்) யிருந்தபோதிலும் அரசன் குடி களைத் துன்புறுத்தாமல், குடிகளுடைய பிறப்புரிமை களைக் காப்பாற்றிச் செவ்வனே அரசியல் நடாத்திவந் தான். அரசனுக்கே சகல உரிமைகளும சகல அதி காரங்களும அக்காலத்திருநதன. அரசனுக்குயர்நத அதிகாரி கிடையாது. சகல வியவகாரங்களிலும அர சனுக்குச் சர்வ அதிகாரமுமிருந்தது. சட்டங்கள் ஏற்படுத்துவதும், உத்திரவுகள் பிறப்பதுமாகிய இராச் சிய காரியங்கள் யாவையும அரசனே நடத்திவநதான். ஆனால், அரசனுக் குதவியாக ஐம்பெருங் குழுவினரும் இக்குழுவினருக் குதவிபுரிய பல ஆயத்தாரும, இருந் தனர். இறைமாட்சி, குடிமாட்சி, அறததின வழி, வாணிகவியல்பு, படைததிறவகை, ஒற்றரியல்பு ஆகிய அரசியல் வகைகளில் மதிமநதிரிகள் அபபோதைக்கப் போது அரசனுக் குதவிசெய்து வநதனர். இவர்க ளிடம் ஆலோசித்தே அரசன் சகல காரியங்களையும் நடத்துவான். இம்மதிமந்திரிகளின் கூட்டத்திற்கு 'உடன் கூட்டத்து அதிகாரிகள்' என்று பெயர். இவர்கள் அரசன் நித்திய வாழ்க்கைக்குரிய காரியங் களிலும் அவனுக்கு ஆலோசனை கூறிவந்தனர். அர சன் தண்டயாத்திரை செய்யுங் காலங்களிலும் அங் கங்கே கொலு விருப்பது வழக்கம். சகல உத்திரவை களையும் இராஜனுடைய இலாஞ்சினை யமைத்து நன்கு காப்பிட்டுப் பல நாடுகளுக்கு அனுப்புவது வழக்கம். அரசனுடைய இலாஞ்சினையைக் கைக்கொண்டு முக்கிய

காரியஸ்தராக யிருப்பவருக்கு 'திருமந்திர ஓலை நாயகம்' என்று பெயர். இவரே சகல அரசரின் உத்திரவையும் முத்திரையிட்டுக் காப்பிடுவது. காப்பிட்ட பிறகு உத்திரவுகளை முறையே யனுப்புவர்களுக்கு 'விடையல் அதிகாரிகள்' (Despatching Clerks) என்று பெயர். இராஜ இராஜனுக்கு அந்தரங்க அதிகாரி யானவன் பல்லவராயன் என்பவன். இவன் தாளித்திருப்பனங் காட்டின் தலைவன்; க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டைச் சேர்ந்த புலியூர் நாட்டு நெரிவாயிலுக் குரியவன். அவன் அரசனுக்குச் சமயோசிதமாகச் சூழ்ச்சியுரைக்க வல்லவனுயிருந்தான். தலை நகரின் கண்ணே அரசாங்க பொக்கிஷம் வைக்கப்பட்டிருநதது. இதற்குப் 'பெருந்தனம்' என்று பெயர். இப் பெருந்தனத்திலிருந்தே நாட்டின் சகல அதிகாரிகளுக்கும் பொன் (சம்பளப்பணம்) கொடுப்பது வழக்கம். இது தவிர, 'சிறுந்தனம்' பல உண்டு. கோயில்களில் வைக்கப்படும் இச் சிறுந்தனத்திலிருநதே கோயில் செலவுகளுக்கும் தான தர்மங்களுக்கும் செலவழிப்பது வழக்கம். தவிர, கோயில்களின் மானிய நிலங்களின் சாஸனங்களும் காப்புச் சீட்டுகளும் இச்சிறுந்தனத்திலேயே வைக்கப்படும். இவைகளுக்குத் தனித்தனி அதிகாரிகளுமிருந்தனர். அவர்களுக்குப் பெருந்தரம் எனப்படும் எனச் சிலர் கூறுவர். [மண்டலங்களைத் தனித்தனியே ஆட்சி நடத்த மண்டலீகர்கள் இருந்தனர். அவர்களை இராஜ இராஜனே மேல் பார்வையிட்டு வருவான். அரசவம்சத்தைச் சேர்ந்தவர்களாகவும், போரில் நல்வெற்றி பெற்றவர்களாகவும், அரசியலில் முதிர்ந்த ஞானங் கொண்டவர்களாவும் இருப்பவர்களையே இராஜ இரா

ஜன் பொறுக்கி யெடுத்து அம்மண்டலங்களுக்கு அனுப்புவது வழக்கம். அவர்கள் அடிக்கடி தலைநகரத்திற்குவந்து அரசனைக் கண்டு குடிகளின் உரிமைக்குரிய விஷயங்களையும் உத்திரவுகளையும் பெற்றுப் போவது வழக்கம். அவர்களுக்குக் கால நிர்ணயங் கிடையாது. அரசனுடைய அன்புக்குப் பாத்திரமானகாலம் வரை அவர்கள் அம்மண்டலங்களில் வரும் வரிப்பணங்களை வசூலிப்பதும், நியாயத்தீர்ப்பு செய்வதும், கோயில் குளங்களின் பணத்தையும் மானிய நிலங்களையும் அபகரிக்காமலும் துர்வினியோகஞ் செய்யாமல் காப்பதும், நாடுகளில் கலசமும் சண்டையும் உண்டாகாதபடி பாதுகாப்பதும், ஜனங்களுக்குள்ளே சாந்தியும் சமாதானமும் நிலைபெறும்படிச் செய்வதுமான சகல காரியங்களையும் நிர்வகிப்பதே அம்மண்டலீகர்களின் முக்கிய கடமைகளாகும் இம்மண்டலீகர்களின் கீழ் 'நாடு கண் காட்சி' 'நாடு வாகை' என அதிகாரிகளு முண்டு. நாட்டைப் பற்றிய விவகாரங்களையும் வேலைகளையும் நடத்துபவனுக்கு நாடு கண்காட்சி என்று பெயர். பல நாடுகளை அடிக்கடி போய்ப் பார்த்து அரசனுக்கு அப்போதைக்கப்போது தெரிவித்து வருபவருக்கு 'நாடுவாகை' என்று பெயர். இவ்விருவர்களும் அரசனிடத்து அன்பு பெற்றவர்களாகவும் நன்னடக்கை கொண்டவர்களாகவு மிருக்க வேண்டும். அத்தகையோர்களையே அரசன் நியமிப்பது வழக்கம். அவர்களுக்குக் கீழே இன்னும் பல கீழ்தர அதிகாரிகளு மிருந்தனர்.

கிராம சமுதாயம்—1. தமிழகத்தில் கிராம சமுதாயம் காலங்கண்ட வழக்கமாக வந்தபோதிலும் இராஜ இராஜன் காலத்தில் அச் சமுதாயங்கள் மிக்க சிறப்

புற்று விளங்கின. நம் பாரதநாட்டில் தொன்று தொட்டுவந்த இக்கிராம சமுதாயம் இன்னுஞ் சிற்சில ஊர்களில் அப்பழைய ஆசாரச் சின்னங்கள் காணப்படு கின்றன. இக்கிராம சமுதாயங்களே பாரதநாட்டுக்கு அஸ்திவாரங்களாக யிருந்தன. மன்னர்கள் மாண்ட போதிலும், சிங்காதனங்கள் சிதறினபோதிலும், வம் சங்கள் வாளா வளர்ந்தபோதிலும் இக்கிராம சமு தாயங்கள் மட்டும் அழியவில்லை. பாரதநாட்டின் மீது இடைவிடாது படையெழுச்சியுண்டான காலத்திலும் இக்கிராம சமுதாயங்கள் அசையாமல் அசலம்போல் நின்றன. இக்கிராம சமுதாயங்கள் முகம்மதீய படை யெழுச்சி காலததிலும, மகாராஷ்டிர படையெழுச்சி காலததிலும் சிதைவுறாமல் இருநதன. இக்கிராம சமு தாயங்கள் தனித்தனியே குடியரசு கொண்டதாக விருநதன வென மேனாட்டு சரித்திரக்காரர்களே கூறு வர். கிரீஸ் தேசத்துச் சரித்திரக்காரர் மெகஸ்தனிஸ் பாரதநாட்டில் பண்டைகாலத் திருந்துவநத கிராம சமுதாயம் ஒவ்வொன்றும் தனித்தனியே சுதந்தரங் கொண்ட குடியரசாக விருநததெனக் கூறியுள்ளார். இக்கிராம சமுதாயத்தார்களின் சபைக்கு மகாசபை அல்லது மகாஜனசபை யென்று கூறப்படும். இதைக் கண பெருமக்கள் என்பார். கிராம வியவகாரங்கள் யாவையும் இச்சபை பரிபாலிக்கும். கிராமங்களின் நிலங்கள், ஏரிகள், குளங்கள், வாய்க்கால்கள், மரங் கள், கோயில்கள், பொழில்கள், மடங்கள், பள்ளிக் கூடங்கள், நியாய விசாரணைகள், முறையீடுகள், பாதை கள், ஒழுக்க வழக்கங்கள் ஆகிய யாவும் பிறவும் இச் சபை யினர்களாலே பரிபாலிக்கப்பட்டு வந்தன. அவர்களுக்குமேல் பார்வையாக அடிக்கடி நாட்டு அதி

காரணிகள் வருவர். அவர்கள், படைச் சேனாதிபதி யாகவேனும் நாடுகளைச் சேர்ந்த முக்கிய காரியஸ்தர்க ளாகவேனும் இருப்பர். அவர்கள் கிராம சபைகளின் வரவு செலவு கணக்குகளையும், சபையினர்களின் நடத்தை முறைகளையும், விசாரித்துப் பெருநதனத்தி லிருந்து கிராமச் செலவுகளுக்குப் பணஉதவியுந் தந்து போவர். கிராம சபைகள் முக்கியமாகக் கோயில்களி லும் பிரம்ம ஸ்தானங்களிலும் நடப்பது வழக்கம். பிரம்மஸ்தான மென்பது சபை கூடுவதற்கென்றே தனியாகக் கட்டப்பட்ட மண்டபம். தவிர, பெரிய மரங்களின் நிழல்களிலும் சபைகள் கூடுவதுண்டு. சபைகள் சரியாகக் கோளாறுகளின்றிச் செவ்வனே நடந்துவந்தன. சமுதாயத்தார் ஒவ்வொருவரும் சபை பரிபாலன விஷயமாகப் பெருமுயற்சியும் ஊக்க முங் கொண்டிருநதனர். சிற்சில கிராம சபைகளில் ஐம்பது, நூறு, இருநூறு பிரதிநிதிகளு மிருந்தனர். சில கிராமசபைகளில் ஐந்நூறு பிரதிநிதிகளு மிருந்த தாகத் தெரிபவருகிறது. துஷ்டர்கள் அழிவதற்கும் நல்லவர்கள் சுகப்படுவதற்குமே இச்சபைகள் ஏற்படுத் தப் பட்டனவெனக் கூறப்படும். கிராமத்தின் காரி யங்களைப் பரிபாலிக்கும்படிச் சிற்சில விடத்து கிராம பொதுசனங்க ளிடத்தும், பலவிடத்துப் பஞ்சாயத் தார்க ளிடத்தும் விடப்பட்டன. கிராம சபைகளுக் குத் தேறுதல்கள் உண்டு. இத்தேறுதல் (Election) செம்மையாக நடத்துவதற்குக் கிராமங்கள் பல பிரிவு களாகப் பிரிக்கப்பட்டன. ஒவ்வொரு கிராமத்தின் பிரிவுக்கும் குடும்பு என்றுபெயர். முதன் முதல் தேறு தல்களுக் குரித்தானவர்களின் பெயர்களை ஓலையில் எழுதி அந்தந்த பிரிவுகளுக்கு அனுப்புவர். சபைக்

குரித்தான பிரதிநிதிகளின் எண்ணிக்கையையும் அவ் வோலையுடனே யனுப்புவதுண்டு. பிறகு பெயர்கள் எழுதின ஓலைகளைப் பெரிய பானைகளிற் போட்டுப் பொறுக்கியெடுப்பது வழக்கம். (1) வரி செலுத்தக் கூடிய கால்வேலி நிலங்களாகிலும் ஒருவனுக்கு இருக்க வேண்டும். (2) ஒருவன் தன் சொந்த மனைக்கட்டில் வீடுகட்டி யிருக்கவேண்டும். (3) எழுபத்தைந்து வய துக்குக் கீழ்ப்பட்டும் முப்பத்தைந்து வயதுக்கு மேற் பட்டவனுகவு மிருக்கவேண்டும். (4) மந்திர பிராமணம் தெரிந்து பாடஞ் சொல்லுவிக்குஞ் சாமர்த்திய முள்ள வனுக யிருக்கவேண்டும். (5) ஒருவேதமாகிலும் பாரா யணஞ் செய்வதவனுகவும் ஒரு பாஷ்யமாகிலும் அறிந் தவனுகிலும் இருப்பானே யாகில் அவன் அரைக்கால் வேலி நிலமுள்ளவனு யிருந்தாலும் தேறுதலுக்கு உரியவனெனக் கொள்ளப் பட்டது. மேற்கூறிய இவ் வைந்து வகையினர் தேறுதல்களுக்கு குரியவர்களா யினும், அவர்களுக்குக் குள்ளே, தர்மா தர்மங்களும், நீதிமுறையும், வியவகாரவழியும் தெரிந்தவனும், திரவி யத்தை நல்ல வழியில் சம்பாதித்தவனும், நல்ல ஒழுக்கமும் மனச்சுத்தியுமுள்ளவனும், மூன்று வருட காலம் எந்த சபையிலும பிரதிநிதியாக யில்லாதவனு மானவனையே தெரிந்தெடுக்க வேண்டும் என்பது பண்டைக்கிராம சபைகளில் பிரதிநிதிகளாகத் தெரிந் தெடுக்கப் படுபவர்களின் தன்மை. இக்கிராம சபை களுக்குப் புருடர்களும ஸ்திரீகளும் பிரதிநிதிகளாகத் தெரிந்தெடுக்கப்படுவர். மாதர்களுக்கும் புருடர்களைப் போலவே உரிமைகள் பல விருந்தன. கிராம சமு தாயத்தைச் சேர்ந்த சபைகளிலொன்றுன நீதிமுறை செய்யுஞ் சபைக்கு ஒரு ஸ்திரீ தேர்ந்தெடுக்கப் பட்ட

தூரகக் காஞ்சிபுரத்திற்குப் பன்னிரண்டுமைல் தூரத்தி லுள்ள உத்தர மேரு நல்லூரில் அகப்பட்ட சிலா சாதனமொன்று கூறுகிறது. அந்த ஸ்திரீக்கு பெருங் கூர நாயகி அல்லது தேவர்கள் அம்மை எனப்பெயர் என்றும் அச்சாதனம் கூறும. பண்டைக்காலத்தில் மாதர்களுக்குச் சுதந்தரமில்லை யென்றும் கிரக காரியங் கள் தவிர மற்ற காரியங்களில் அவர்களுக்குரிமையே யில்லையென்றும் மேனாட்டாரிற் பலரும் இந்நாட்டாரிற் சிலரும் கூறிவநதனர். அவர்கள் கூற்று ஆதாரமற்றது என்பது மேற்கூறிய சாதனக்குறிப்பாலறியலாம். சற்றேறக்குறைய ஆயிரம் வருடங்களுக்கு முன்னர் இந்நாட்டில் மாதர்களுக்கிருநத சுதந்தரங்கள் இற் றைக்கு இருக்கின்றனவா வென்பதை நாம் உணர வேண்டும். நிற்க, தேறுதல்களுக் குரிமைபற்றவர்கள் எவரெவர் என்பதையும் வெகு விரிவாக வெளியிடப் படும். தேறுதல்களுக் குரிமையற்றவர்களின் தன்மை பின் வருமாறு :—

(1) மேற்கூறிய யாதாமொரு பஞ்சாயத்து சபையில் பிரதிநிதியாகவிருந்து கிராமக் கணக்குகளைச் சரியானபடி காண்பிக்காமலும், கிராமப் பணத்தைத் துர்விநியோகஞ் செய்தும் அல்லது தன் சுயப்பிர யோசனத்துக் குபயோகப்படுத்திக்கொண்டு வநத ஒரு வன் தன் ஜீவிய காலம்வரை தேறுதல்களுக் குரிமை யற்றவனாதலோடு அவனுடைய தாயின் தங்கை தமக்கைமார்களின் புத்திரர்களும், தகப்பன் தங்கை தமக்கைமார் புத்திரர்களும், அம்மான்மார்களும், சிற் றப்பன் பெரியப்பன்மார்களும், சகோதரர்களும், மாமனார் மைத்துனன்மார்களும், தங்கை தமக்கைமார் புருஷர்களும், சகோதரர்களின் புத்திரர்களும் மருமகப்

பிள்ளைகளும், தகப்பனும் பிள்ளைகளும் ஆகிய இவர்களும் தேறுதல்களுக் குரியவர்களாக மாட்டார்கள்.

(2) விபசாரஞ் செய்பவன், பஞ்சமகாபாதகங்களைச் செய்பவன், (பிராம்மணனைக் கொன்றவன், சுராபானஞ்செய்தவுன், பொன்னைத் திருடினவன், குருபத்தினி கமனஞ்செய்தவன்) ஆகிய இவர்களும் தேறுதல்களுக் குரியவர்களாக மாட்டார்கள்.

(3) சாதிகெட்டவன், பைத்தியம்பிடித்தவன், பிறர்பொருளை யபகரித்தவன், உண்ணக்கூடாத வஸ்துக்களை உண்டு தர்மந்தவறினவன், கழுதைமீதேறினவன், தப்புக் கையெழுத்திட்டவன், மூடன், பொய்யன், ஒழுக்கங்கெட்டவன், கிராம சமாதான வாழ்க்கையைக் கெடுத்தவன், சண்டைக்காரன், ஆகிய இவர்கள் தேறுதல்களுக் குரியவர்களாக மாட்டார்கள். தேறுதல்களுக் குரியவர்களின் பெயர்களைக் காப்பிட்ட ஓலைத்துண்டுகளைப் பெரிய பானையில் போட்டுக் கோயில் நம்பிகளையும் கிராம சபையினர்களையுங் கொண்ட ஒருசபை நடக்கும். கிராமத்தில் முதிர்ந்த வயது கொண்டவர் ஒருவர் சபா நாயகராகவிருப்பர். இவருக்கு 'ஊர்க்கிழவன்' என்பார். பானையிலே போடப்பட்டிருந்த ஓலைத்துண்டுகளை நன்றாய்க் குலுக்கி ஒரு சிறு பையனைவிட்டு எடுக்கச் சொல்வதுண்டு. அப்பையன் எடுத்த அந்த ஓலைத்துண்டை நம்பிகளிலொருவர் முன்வந்து, அனைவரும் நன்கு கேட்கும்படி உரக்க அவ்வோலைத் துண்டில் எழுதப்பட்டிருந்த பெயரைப் படிப்பார். படிக்கப்பட்ட பெயர்கொண்ட அப்பிரதிநிதி உடனே கிராம மகாசபைக்குரிய நபர்களிலொருவனாக நியமிக்கப் படுவான். இவ்வழக்கம் வெகு காலமாகத் தமிழகத்தில் ஏறக்குறைய ஆயிர

வருடகாலமாக நடந்து வந்தது. இக் கிராம மகா சபைக்குப் பஞ்சவாரியம் அல்லது ஐந்து சபைகள்* உண்டு. ஒவ்வொரு சபையும ஒவ்வொரு காரியத்திற் காக ஏற்படுத்தப் பட்டது. கிராமத்திலுள்ள அரசாங்க சம்பந்தமான நெல் தானியங்களை அளக்கவும், மற்ற சபைகளை மேல் பார்வையிடவும், கொடுக்கல் வாங்கல் கணக்குகளையும் மற்ற வட்டிப்பணத் தொகை முதலிய புள்ளி வகைகளைப் பார்வையிடவும் தனியே ஒரு சபையிருந்தது. மற்றொரு சபையும் உண்டு. இச்சபை கிராமத்தின் ஏரிகளையும் வாய்க்கால்களையும் ஓடைகளை யும் குளங்களையும் செப்பனிட்டு ஒழுங்கு படுத்தவும், ஆறுகளில் வரும ஜலத்தைக் கட்டிப் பத்திரப்படுத்தி நிலங்களுக்கு வேண்டிய நீர்ப்பாசனங்களைத் திருத்திச் சண்டையின்றி தண்ணீர் முறைவிட்டுச் செய்யவும், பிடாரிகோயில் வாசலில் தவிர, மற்ற இடங்களுக்குச் சென்று வெற்றிலை விற்போரிடம் நீர் முறைக்காசு என ஒரு பொன்கழஞ்சு வரிவாங்கி வசூலிக்கவும் இந்த சபையினுடைய பொறுப்பாக யிருநதது. மூன்றாவ தாக இன்னொரு சபையுமுண்டு. இது பொழில்களை யும், தோப்புகளையும் பார்வையிட்டும, கிராம பாதை களைப பரிசோதித்தும் வருவதுண்டு. புதிய பாதை களை யமைக்கவும், நிலச்சுவான்தார்க ளிடமிருநது பாதைகளைப் பெருக்குவதற்காகவோ அல்லது பாதை களைப புதிப்பிக்கவோ நிலங்களை வாங்கவுமான பொறுப் பையும இச்சபை செய்யும். நான்காவதாக ஒரு சபையு முண்டு. இந்த சபைக்குமட்டும் 'பஞ்சவாரவாரியம்'

* வட ஆற்காடு ஜில்லாவிலுள்ள திருப்பாற்கடல் என்னு மிடத்திற் கிடைத்த சாஸனம் கிராம சபைகளைப்பற்றிக் குறிக்கும்.

என்று பெயர். இது நஞ்சை புஞ்சை நிலங்களினின்றும் வரி திரட்டும். நிலங்களுக்குரிய கடமைகளை விதிக்கவும், வாங்கவும், நீக்கவும் இச்சபைக் குரிமையுண்டு. கடைசியாக ஐந்தாவது சபையொன்று முண்டு. இதற்குப் 'பொன்வாரியம்' என்று பெயர். கிராமங்களின் பொன்னுணயங்களை வசூலிக்கவும் மாற்றவும், சரியான பொற்காசு பரீட்சைசெய்யவும் இச்சபைக் குரிமையுண்டு. இந்த பஞ்ச சபைகளை 'ஐம்பெருங்குழு' எனச் சிலர் கூறுவர். கடைசி இரண்டு சபைகளும் மகா சனசபைக் குட்பட்டவை. கணபெருமக்கள் என்பது கிராமசபை; கிராம காரியத்தை நடத்தும் சபைக்கு கணவாரியம் என்று பெயர். தவிர, கோயில் வாரியமும் உண்டு. மேற்கூறிய சபைகளின் காரியங்கள் யாவும் மதயஸ்தர் ஒருவரால் செய்யப்படும. இவருக்குக் கருணத்தன் என்றும பெயருண்டு. சபைகளின் வரவு செலவு கணக்குகளைக் குறிக்கவும் பார்வையிடவும் ஆகிய யாவையும இம மத்யஸ்தரே செய்வது வழக்கம். கிராமத்திலுள்ள கோயில் நிர்வாகக் காரியந தவிர மற்ற சகல கிராம விஷயங்களையும் இக்கிராம சபையினர்களே பார்வையிட்டு வந்தனர். கிராமங்களின் நிலங்களை அளக்கவும், வரி விதிக்கவும் வரி வசூலிக்கவும், வசூல் செய்த பொன்னை யனுப்பவுமான அலுவல்களை இக்கிராம சபைகளே செய்துவந்தன. மூன்று வருடகாலம் வரி செலுத்தாத நிலங்கள் பறிமுதல் செய்யப்படும். இந் நிலங்கள் யாவும் அரசனுடைய நிலங்களாகும். கிராமத்திலுள்ள பெருமக்கள் குடிகளின் சௌகரியங்களையும், முறையீடுகளையும் மற்ற பலவித விஷயங்களையும அடிக்கடி தெரிவிப்பதுண்டு. பிரதிநிதிகளாகத் தேர்நதெடுக்கப்பட்டவர்

கள் ஒருவருட காலம்வரை அச்சபைக் குரியவர்கள். அடுத்த வருடத்தில் வேறு சிலர் தேறுதல்களுக் குரிய வர்களாகிச் சபைக்கு வருவர். சபைக் குரியவர்களில் எவரேனும் நீதி முறை தப்பி ஒழுக்கத்திற் குறைந்தவ ராகில் அவரை உடனுக்குடன் சபையைவிட்டு நீக்கி, மீண்டும் மற்றொருவரைத் தேர்ந்தெடுப்பர். மேற் கூறிய கிராம சபைகளில் ஏதேனு மொன்று நியாய வரம்பு கடக்கின், அச்சபைக்கு அபராதம அரசனால் விதிக்கப்படுவதுமுண்டு. புதுபபாக்கததிலுள்ள கிராம சபையினர் அவ்வூர்க் கோயில் வருமபடியைச் சொநத காரியங்களுக் குபயோகப் படுததினதற்காக அரசன் அச்சபைக்கு அபராதம விதிததான் என்பதாகக் கூறப் படுகிறது. மேற்கூறிய கிராமசபைகள் முதலாவது பராந்தக சோழனால் ஸ்தாபிக்கபபட்டவை. அவனுக் குப் பிறகு முதலாவது இராஜ இராஜனே நன்கு சீர் திருத்திக் கிராம சபைகளைச் சிறப்பிக்கச் செய்தான். இக்கிராம சபைகளின் காரியங்களைப் பற்றிய பல சாத னங்கள் இருக்கின்றன. உக்கல் சாதனம சபைக ளின் காரியங்களைப்பற்றிச் சிறப்பாகக் கூறுகிறது.

நடுவுநிலைமை—2. செல்வர்க்கும வறியார்க்கும் செய்யு முறைமையைத் தெரிநது அரசன் வழுவாதே நடுவாகச் செய்துவந்தான். நீதிசெலுத்துவதில் சோழ மன்னர்கள் பேர்போனவர்கள். சோழமன்னர்களின் மூதாதைகளில் ஒருவரான சிபி நீதியின் நிமித்தம் ஒரு புறவுக்குத் தன் தேகத்தின் மாமிசததைத் துண்டு படுத்திக் கொடுத்தான். மற்றொருவன் மனுநீதிகண்ட சோழன் என்பான் நீதிமுறையின் நிமித்தம் ஒரு பசுங் கன்றுக்காகத் தன் மைந்தனைத் தேர்காலி விட்டுக் கொன்றான். சோழமன்னர்கள் நல்ல நீதிசாஸ்திர

மறிந்தவர்கள். நீதிபரிபாலனம் அக்காலத்தில் தர்ம சாஸ்திரப்படியும் நாட்டுவழக்கப்படியும் செய்யப்பட்டு வந்தது. உயர்ந்தசாதிக்கும் தாழ்ந்தசாதிக்கும் தண்டனைமட்டும் வித்தியாசப்பட்டிருந்தது. நீதிபரிபாலனம் அநேகமாக அரசனால் செய்யப்பட்டுவந்தது. ஆனால் நீதிமுறை தெரிந்த குழுவினரிற்சிலர் அரசனுக்குதவிசெய்வர். கிராம வழக்குகளை அக்கிராம சபைகளே தீர்க்கும். நீதிஸ்தலங்களுக்குத் 'தர்மாசனம்' என்று பெயர். திருடுங்குற்றங்களுக்கும் ஏமாற்றுங் குற்றங்களுக்கும் அபராதம் விதிக்கப்படும். சிறையும் அக்காலத்திலுண்டு. சிறைக்கோட்ட மமைப்பதும் சிறைபட்டவர்களுக்கு அன்னம் கொடுத்தலும் அரசர்க்குரிய முப்பத்திரண்டறங்களில் ஓர் அறமாகும். தேக தண்டனையும் அக்காலத்திருந்தது. தொழுமரத்திலேற்றுதல், கைகால்களைச் சேதப்படுத்துதல் முதலிய தேகதண்டனைகள் காலங்கண்ட வழக்கமாக நடந்து வந்தன. கோபத்தால் கொலை செய்பவர்களுக்குத் தண்டனை குறைவாகவே யிருந்தது. அரசாங்கத்திற்கு விரோதமாகக் கலகஞ் செய்பவர்களைச் சிறைப்படுத்தி அன்னவர்கள் ஸ்தாவரஜங்கமப் பொருள்களைப் பறிமுதல் செய்து கோயில்களுக்கும் மற்ற தர்ம காரியங்களுக்காகவும் விற்கப்படும். நகரசோதனைக்காகக் காவலர்கள் பலர் இருந்தனர். இவர்களுக்குத் தலைவன் "தண்டநாயகன்' எனப்படுவான். இப்பொழுது அரசாங்கத்தில் போலீஸ் இருப்பதுபோல அக்காலத்தில் காவற்படை வெகு சிறப்பாக யிருந்ததெனக் காணப்படுகிறது.

இராணுவம்—3. பண்டைக்காலத்திய அரசாங்கங்களில் பொதுவாக சாந்தியும் சமாதானமும் குடி

கொண்டிருந்தபோதிலும் நகரக்காப்புக்கும் தேசகாப்புக்கும் படை இன்றியமையாததாகவே யிருந்தது. படையே அரசுக்கு ஆதாரமாகப் பண்டையில் கொள்ளப்பட்டது. சோழர்கள் வாணிகத்துறையில் சிறப்புற்றவர்களாதலால், கடற்கள்ளர்களினின்றுங் காக்கப் பூர்வம் கடற்படைகளையும் பெருக்கினர். பழந்தீவு பன்னீராயிரத்தின்மீது படையெடுத்த காலத்திலும், ஈழமண்டலத்தின்மீது படையெடுத்த காலத்திலும் இராஜ இராஜன் கடற்படையைத் திரட்டிப் போர் புரிந்தான். தரைப்படை வெகு சிறப்பாகவே இராஜ இராஜன் காலத்தி லிருந்தது. சாளுக்கியர்கள்மீது படையெடுக்கையில் ஒன்பது லட்சம் வீரர்களுடன் இராஜ இராஜன் போர்புரிந்தான் என்று கூறப்பட்டது. இராஜ இராஜன் காலத்தில் சுமார் இருபது லட்சத்திற்குக் குறையாமல் போர் வீரர்கள் இருக்க வேண்டுமெனச் சில சரிதகிரக்காரர்கள் கூறுகின்றனர். சோழ இராச்சியத்தைச் சேர்ந்த ஒவ்வொரு மண்டலங்களிலும் படை யிருப்பு உண்டு. சேனாதிபதிகள் மண்டலீகர்களுடன் வேற்றரசர் வாராவண்ணம் காத்து வருவர். இராஜ இராஜன் காலத்தில் தேர்ப்படை யிருந்ததாகத் தெரியவில்லை. யானைபபடை, குதிரைப் படை, காலாட்படை ஆகிய இம்மூன்றும் உண்டு. வேல், வாள், ஈட்டி, சூலம், இருப்புலக்கை, கத்தி, கேடயம் இவைகளே யுத்ததளவாடங்களாக இராஜ இராஜன் காலத்திருந்தன. கோட்டை மதில்சுவர்மீது பெரிய கற்பாறைகளும், கொதிக்கும் எண்ணெய் நிறைந்த கடாரங்களும் வைக்கப்பட்டிருக்கும். இவை பகைவர்கள் கோட்டைக்குள் நுழையாதபடி தடுப்பதற்குதவும் தடைத்தளவாடங்களாம். காலாட்படைக்

குள் இடக்கையான் படையென்றும் வலக்கையான் படையென்றும் உண்டு. யுத்தவீரர்களின் நாயகர் களுக்கு சமந்தன், மகாசமந்தன், சேனாபதி எனப்பதவி கள் இருந்தன. அரசனுக்கு மெய்க்காப்புப் படையு முண்டு. அது கோளாந்தகப்படை, இராஜ இரா ஜன் தேர்ந்தெடுத்த இடக்கையான்படை, பராந்தகன் கொங்குவாட்படை, நிகரிலி சோழநாட்டில் தேர்ந் தெடுத்த இவுளிப்படை, மும்முடிச் சோழன் தேர்ந் தெடுத்தக் களிற்றுப்படை என்ப. தவிர 'யானைச் சேவகன்' என்றும் யானைவீரர்களைக் கூறுவதுண்டு. யுத்தமுறைகள் செவ்வனே காக்கப்பட்டன. ஆயுத மிழந்தவன். முதுகுகாட்டிப் புறம்போந்தவன், பாலர், கிழவர், மாதர் முதலானோரோடு போர்செய்யபபட மாட்டா. தூதுவர் மிக்க மதிப்புக்குப் பாத்திரமாக யிருந்தனர். தூதுவர் ஒருவர் கொல்லப்பட்டால் அவன் நிமித்தம் போர் தொடங்கும். பண்டையில் மன்னர்கள் படைக்கலப் பயிற்சிகொண்டு தர்மயுத்தம் நடாத்தி வந்தனர்.

ஓரரசன், மற்றோரரசன் தனக்குள்ள பகைமையை அவன் நாடு சென்று அங்குள்ள பசுக்களைத் தானே யாவது தன் வீரரைக் கொண்டாவது கவர்ந்து கொண்டு தெரிவிப்பது பண்டை யரசர்களின் வழக்கங் களிலொன்றும். இதனால், அக்காலத்துப் பசுக்கள் பொருளாகக் கருதப்பட்டுவந்தனவென ஊகித்தற் கிட முண்டாகிறது. பகைமைக் கறிகுறியாகத் தாம் கவர்ந்த பசுக்களை மிக்க அன்புடன் தமிழரசர் பாது காத்து வந்தனர் என்பது தோன்ற 'ஆதந்தோம்பல்' என்று தொல்காப்பியர் கூறியுள்ளார். போர் நிகழ்வ தற்குக் காரணம் பிறநாடு கவர்தலாம். அதுபொருட்டே

எஞ்சா மண்ணசை என்று சூத்திரத்திற் கூறியதனு லறிக. போரின் கண்ணே, தமிழர்கள், 'மடிந்த உள்ளத்தோன் மகப்பெறுதோன், மயிர் குலைந்தோன், அடி பிறக்கிட்டோன், பெண் பெயரோன், படையிழந்தோன், ஒத்தபடை எடாதோன், முதலிய இத் தன்மையுடையோரை கொல்லாது விடுவது வழக்கமாம். அவர்கள் வீரத்தோடு கருணையும் பொருந்திய வர்களாயிருந்தனர். தமிழ் வீரர்கள் தங்கள் பெருந் தன்மைக் குணத்தைக் காட்டி மீண்டும, தோற்றெழிந்த பகைவனது நாட்டினைக் கொள்ளை கொள்ளுதல், தீவாய்ப்படுததல், கழுதையாலுழுது வரகு விளைத்தல் முதலிப தகாத செயல்களும் செய்து வந்திருக்கின்றனர். பகைவன் பட்டணத்தின் புறமதிலைத் தாக்குவது ஊழிஞை எனவே நகர்க்கெல்லாம் மதிலரண் அமைத்திருந்ததென்பது வெளிப்படை. இமமதில் மிக்க உரனுடையதாய், எளிதிற் பகைவரால் தாக்கப்படாததாய் அமைக்கப்பட்டிருக்கும். 'முழுமுதலரணம்' என்பது தொல்காப்பிய சூத்திரத்தில் வெளிப்படும். இன்னும இமமதில் பகைவரை யழிக்கவல்ல பல எந்திரங்கள் பொருந்தப் பெற்று, பெரியதோர் அகழாற் சூழப்பெற்றிருக்கும். வஞ்சனை பலவும் வாய்த்துத் தோட்டிமுள் முதலிய பதித்த காவற்காடும், அதனுள்ளே இடங்கர் முதலியன உள்ளுடைத்தாகிய கிடங்கும் புறஞ்சூழ்ந்து, யவனர் இயற்றிய பல பொறிகளும், பதணமும, மெய்ப்புழை ஞாயிலும ஏனைய பிறவும் அமைந்து, அழுவுஞ் சீப்பு முதலியவற்றால் வழுவின்றமைந்த வாயிற் கோபுரமும் பிற எந்திரங்களும் பொருந்த இயற்றப்பட்டதாமென நச்சினார்க்கினியர் விரித்துரைத்ததால் உணரப்படும். தமிழர்

கள் யானை, குதிரை முதலியவற்றை வேண்டிய இடங் களில் உடயோகித்து வந்தனர்.

> 'தானை யானை குதிரை யென்ற
> நோனார் உட்கு மூவகை நிலையும்' என்பது

தொல்காப்பியம்.

போர்க்களத்து வீரர்கள், 'மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையும்' என்று தொல்காப்பியர் கூற் றுனும, 'எந்நாளாயினுங் கூற்றுவன் வருவன், அந்நா ளவனைப் போற்றினும் போகான்' என்று பெரியோர் கூற்றுனும், யாக்கை நிலையாமையை யுணர்ந்து தம் முயிரைப் பொருட்படுத்தாது, மிக்க வீராவேசங் காட்டி யொழுகுவர். தம கணவரேனும தாம் ஈன்ற புதல்வரேனும போரிற் புறங்காட்டி யோடிவரக் காணின் அவர் மனைவியர், தாயர் முதலியோர் தாமே நாணால் உயிர் விடுவர்.

அரசிறை—4. வண்டுகள் தாதுண்ணும் பூவை வருத்தாது விடுதல்போல, செங்கோன் முறைமை கோடாத மன்னர் தம் அடி நிழல் கீழ்வாழும் குடிகளை வருத்தாது ஆறிலொரு கடமை கொள்ளல வேண்டும் என்பதை யறிந்தே பண்டைசோழ மன்னர்கள் ஆறி லொரு கடமையைக் குடிகளிடமிருந்து கொண்டனர். சில மன்னர்கள் நாலிலொன்றும், எட்டிலொன்றும், பன்னிரண்டி லொன்றுமாகக் குடிகளிட மிருந்து கொண்டபோதிலும் இராஜ இராஜன் ஆறிலொரு கடமையைக் கொண்டான் என்பதாகச் சில சாதன ஆராய்ச்சி குறிக்கும். வரி வசூலிப்பது அநேகமாகத் தானியங்களாகவேதான். நகரங்களிலும் வளநாடுகளி லும், தலை நகரிலும் பொற்காசு வழங்கப்பட்டதால்,

பொழில் நிலங்களைச் சேர்ந்த வரி சரியான பொற் காசாக யிருந்தது. கிராமங்கள் தோறும் வரி ஓலை வைக்கப்பட்டிருந்தது. இராஜ இராஜனால் கொடுக்கப்பட்ட தேவதனம், சாலபோகம் ஆகிய மானியங்கள் தவிர, அநேகமாக மற்றெல்லா நிலங்களுக்கும் வரி உண்டு. வரி வசூலிப்பவர்களுக்கு" 'வரிக்குக் கூறு செய்வார்' என்பர். மூன்று வருடகாலம் வரி செலுத்தாதவர்களின் நிலங்கள் அரசனுக் குரியவையாகும. சாகுபடியான நிலங்கள் வெகு சாக்கிரதையுடன் அளக்கப்படும். ஒரு சிறிய நிலத்தையும்கூட விடாமல் அளக்கப்பட்டதாகத் தெரிய வருகிறது. இராஜராஜனின் பதினேழாம் ஆண்டு ஆட்சியில் திருவடிகன் சாத்தன் முக்கிய காரியஸ்தனாக யிருநது நிலங்களை அளந்து கூறுபடுத்தினான். ஒரு சதுர அங்குலத்தின் ஐம்பதினாயிரததி லொருபங்கு விஸ்தீரணமுள்ள நிலத்தையும் இராஜ இராஜன் காலத்தில் அளக்கப் பட்டதென்றால் எவ்வளவு சாக்கிரதையுடன் அரசியல் நடததப்பட்ட தெனக் கூறலாம. அளக்கப் பட்ட நிலங்கள் குழியாகவும் வேலியாகவும் காப் பிடப்பட்டன. குழிக்கு இவ்வளவென குறிப்பிடப் பட்டதற்குக் 'காணிக்கடன்' என்று பெயர். தீர் மானிக்கப் பட்டதற்கு 'நிச்சயித்த கடன்' என்று பெயர். நிலங்களுக்கு நீர்ப்பாசன வழியாகத் தண்ணீர் முறை சரியாக வருகின்றனவாவென்று பார்க்கக் கிராமத்தில் சபையொன்று ஏற்படுத்தப்பட்டு அதின் வழியாக நிலங்களைத் திருத்தப் பல முயற்சிகளும் செய்யப்பட்டன. ஆயத்தீர்வைகளில் வெளி ஆயம், உள் ஆயம் என இரண்டுவித முண்டு. தவிர, போர் முகத்துத் திரட்டின பொருள், வேற்றரசர்கள் கட்டும்

கப்பங்கள், குறுநில மன்னர்கள் கொடுக்கும் காணிக்கைகள், அரச நிலங்களில் வரும் ஆதாயம், காடுகளினுண்டாகும் பொருள்கள், முத்துக்குளித்தலில் வரும் பொருள்கள் ஆகிய யாவும் அரசிறைப் பொருள்களாம். தலைக்கட்டு வரி என ஒருவரி இருந்ததாகவுந் தெரிய வருகிறது. கூலவாணிகர், எண்ணெய் வாணிகர், கைவினைஞர் முதலானோர் வரி செலுத்தி வந்தனர். நீர்வரியும் உண்டு. இதற்கு 'ஒழுக்கு நீர்ப்பாட்டம்' என்று பெயர். கலியாண காலத்தில் மணமகனும மணமகளும் கொடுக்கும் ஒரு சிறிய வரிக்கு 'கலியாணக்கடன்' என்று பெயர். இது கட்டாயமல்ல. கோயிலுக்குச் சென்று சேவைக்குப் போகையில் தரிசனக் கடனாகக் கொடுக்கப்படும். காசுக்கடமை, மாவடை, புன்பயிர், குளவடை என்னும் சில வரிகள் உண்டு. இவையல்லாது வேறு பலவிதமான வரி வசூலிக்கப் பட்டதைக் கோனேரின் மெய்கொண்டான் (திரிபுவன சக்கரவர்த்தி) சிலாசாஸனத்தில் பின்வருமாறு காண்க.

'மருவு, ஓர்ப்பூ, கடைப்பூ, எலிமிச்சை, புன்செய் நிலம, தாமரை, கமுகு, வெற்றிலை, குங்குமப்பூ, இஞ்சி, வாழை, இதர பயிர்கள், ஆய வகைகளில் காசுக்கடமை, ஒடுக்குப்படி, உரைநாழி, கார்த்திகை மாதத்தில் பழுக்காதகாய்கள், தரிஇறை, செக்குஇறை செட்டிஇறை (வர்த்தக வரி), தட்டாரப்பாட்டம், (தட்டார்மீதுவரி), கால்நடை, வழிஆயம், இனவரி, எடைவரி, அழுகல் சரக்கு, அங்காடிப் பாட்டம் (கடைவரி), உப்பாயம (உப்புவரி), ஆகிய வேறுபல இனங்களும் கூறப்படுகின்றன. அவை இன்னவை யென்பது சரியாக விளங்கவில்லை, என்றாலும் அவைகளின் பெயர்

ஈண்டுகுறித்தல் நலம்-பஞ்சுபிலி, ஸந்திவிக்கிரகப்பேறு இலாஞ்சினைப் பேறு, வாசல் வினியோகம், படையிலார் முறைமை, கூற்றிலக்கை, கடைக் கூட்டிலக்கை, விடைப்பேர், மாதப்படி, அரைக்கால்வாசி, ஊசிவாசி, விலைத்துண்டம், நீராணி, காவிரிக்குலை, தேவகுடிமை, நாட்டுப்பாதி, ஆனைக்கூடம், குதிரைப்பந்தி என்பனவாம். இராஜ இராஜன் காலத்தில் சோழமண்டலத்தைச் சேர்ந்த தஞ்சை திருச்சினாப்பள்ளி ஜில்லாவில் வேலியொன்றுக்கு நூறுகலம் நெல், வரியாக வசூலிக்கப்பட்டதெனக் கூறப்படுகிறது. வெள்ளத்தினால் சேதப்படுங் காலங்களிலும் மற்ற கஷ்ட காலங்களிலும் பல வரிகள் தவிர்க்கப்படும். இவ் வரிப்பணங்களினின்றும் இராணுவம், கிராமசபை, அரசவம்சம, தானதர்மம், பொது ஸ்தாபனங்கள் ஆகிய இவைகளுக்குச் செலவழிப்பதுண்டு. நிர்ப்பாசன முறைகளுக்காகச் சோழர் வெகு சிறப்பாக கால்வாய்கள், ஆறுகள், ஏரிகள், அணைக்கட்டுகள் முதலியவைகளை யேற்படுத்தி வந்தனர். சோழமன்னர்கள் பலர் காவிரியினின்று பல சிற்றாறுகளை வெட்டியும் வந்தனர். வீரசோழனாறு, விக்கிரமனாறு, முடிகொண்டானாறு, உய்யக்கொண்டானாறு, வெட்டாறு, வள்ளாறு, வடவாறு முதலிய ஆறுகள் சோழமன்னர்களுடைய பெயரால் விளங்குகின்றன. இங்ஙனம் நீர் நிலைகள் நிரம்பியிருப்பதினால் இந்நாட்டிற்குப் 'புனல் நாடு' எனப்பெயர் வந்தது. கிராமபாதைகள், வர்த்தகப் பாதை, இராஜபாதை முதலிய பல பாதைகள் இருந்தன. பாதைகளின் ஓரங்களில் நல்ல மரங்கள் வைக்கப்பட்டிருந்தன. பிராமண அக்கிராரங்களும், வெட்டியச் சேரிகளும் ஏற்படுத்தப்பட்டன. பல அளவைகள் ஏற்படுத்தப்பட்டன. தானியங்

களை அளக்கவும் நிலங்களை யளக்கவும் கருவிகள் பல விருந்தன. ஒருவேலி என்பது 2000 குழிகொண்டது. தற்காலத்திற்கு 6⅔ ஏக்ரா கொண்டது. 100 குழிக்கு தாடி என்றும், 20 தாடிகொண்டது 1 வேலியென்றும் கூறப்பட்டது. நாழி, உழி, ஒழக்கு, அழாக்கு, செவிடு, தூளி, பதக்கு, மரக்கால், எனப்பல அளவைகள் உண்டு. மரக்காலுக்கு ஆடவல்லான் என்றும் இராஜகேசரி என்றும் பெயர். தங்கம், வெள்ளி முதலியவைகளை நிறுகக அளவைகளு மிருந்தன. 20 மஞ்சாடி கொண்டது ஒரு கழுஞ்சுபொன். பல குன்று கொண்டது ஒருமஞ்சாடி குன்று என்பது குநதமணியாக விருக்கலா மென்பது ஓர் ஐயப்பாடு. இராஜ இராஜன் காலத்தில் பொன்னுணயச் சிலாமணி யிருந்தது. இப் பொன்னுணயத்திற்குக் காசு என்று பெயர். 12 அக்கம கொண்டது ஒரு காசு தங்கநாணயம், வெள்ளி நாணயம, செப்புநாணயம், விசேஷமாக உபயோகததி லிருந்தன வென்றும கூறப்படும. தங்க நாணயத்தில், துலைநிறைப்பொன், உருககுச் செமபைப் பொன் என இரண்டுவித முண்டு. தங்க நாணயத்தில் ஒரு பக்கம் நடராஜ ஸ்வாமியின் உருவமும, மற்றொரு பக்கம் இலங்கையைச் சேர்நத உருவ மொன்றும காணப் படும். நாணயங்களின் பரிசோதகர்கள் இவ்வுருவங்களைப் பற்றிச் சரியாகக் கூறவில்லை. ஏனெனில் நாணயத்திலுள்ள உருவங்கள் விளக்கமாகத் தெரியாமையேயாம். ஒவ்வொரு காசும் இரண்டுகலம் நெல்லுக்குச் சமமாக யிருந்தது. இங்ஙனம், இராஜராஜன், தஞ்சையைத் தலைநகராகக்கொண்டு வாணிகத் துறையை வளம் படுத்திக் கடாகம் முதற்கொல்லம் வரை செங்கோலோச்சி தமிழ்நாட்டை உழவு, வாணிகம், தொழில்

முதலியவைகளில் நாகரிகப்படுத்தி உலகாண்டான் என வறிக. இராஜராஜன் காலத்தில் வேளாளரும் கைக்கோளரும் வெகு சிறப்புற்று வாழ்ந்து வந்தனர். ஸமர கேஸரி தெரிஞ்சகைக் கோளர், விக்கிரம சிங்க தெரிஞ்ச கைக் கோளர், வீர சோழ தெரிஞ்சகைக் கோளர் என பல்வகை கைக்கோளர்கள் இருந்தனர். தவிர ராஜ ராஜத் தெரிஞ்ச கைக்கோளர் எனவும் இருந்தனர். இங்ஙனம் முடியுடை மன்னர்க்கொரு முடியாய் விளங்கித் தமிழகத்தை மேம்படச் செய்த அருள் மொழித் தேவனைப்பற்றியாம் அறிந்தவற்றை ஒருவாறு சேர்த்துக் கூறினோம். தமிழ் உலகினர் குணநாடிக் கொள்வாராக.

முற்றிற்று.



---

P. R. Rama Iyar & Co., Printers, Madras